ஸ்ரீரஸ்து

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்



ஸ்ரீபராசரபட்டர் அருளிச் செய்த

# அஷ்டச்லோகீ

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

## அண்ணங்கராசாரியர்

இயற்றிய ஸாரார்த்த தீபிகையுரையுடன் கூடியது.

**மூன்ருவது பதிப்பு**

ரத்தினம் (கினே) அச்சகம்,

65, திருப்பள்ளித் தெரு, சென்னை-1

**ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வத்தின் அநுபந்தம்—1**

கிடைக்குமிடம் :

**கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3**

**213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, ஜி, டி.**

1969

ஸ்ரீ:

பட்டர் திருவடிகளே சரணம்

# அஷ்டச்லோகீ வியாக்யான அவதாரிகை

ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபடுகின்ற நாம் நல்வீடு பெறுவதற்குப் பலபல விஷயங்கள் தெரிந்துகொள்ள வேண்டியவையுண்டு. அவற்றுள் மிகவும் முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டியவை ஐந்து அர்த்தங்கள். அவையே அர்த்தபஞ்சக மெனப்படும். அவையாவன:

1. எம்பெருமானுடைய ஸ்வரூபம்.
2. ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபம்.
3. நாம் அனுஷ்டிக்க வேண்டிய உபாயத்தின் ஸ்வரூபம்.
4. நாம் பெறவேண்டிய புருஷார்த்தத்தின் ஸ்வரூபம்.
5. அதைப் பெறவொட்டாத விரோதியின் ஸ்வரூபம்.

ஆக இவ்வைந்து விஷயங்களை உள்ளபடி தெரிந்து கொள்வதே அர்த்த பஞ்சக ஜ்ஞான மெனப்படும். இந்த ஞானத்தை விரிவாக விளைவிப்பதற்காகவே உஜ்ஜீவந சாஸ்த்ரங்களான பலவும் தோன்றி யிருக்கின்றன. வேதங்களும் அவறறுக்கு உபப்ர்ம்ஹணங்களான இதிஹாஸ புராணங்களும் திவ்யப் பிரபந்தங்களுமாகிய ஸகல ப்ரமாணங்களும் மேற்சொன்ன அர்த்த பஞ்சகத்தை விசதீகரிப்பதற்கென்றே அவதரித்தனவாம்.

அவை யெல்லாவற்றினுள்ளும் திருமந்திரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயமே தலை சிறந்து விளங்கும் பிரமாணங்களாதலால் அந்த மூன்று ரஹஸ்யங்களின் வழியாக அர்த்தபஞ்சக ஜ்ஞானம் பெறுவதே மிகச் சிறந்தது. இந்த ரஹஸ்யத்ரயமும் பேரருட் கடலான எம்பெருமானாலே இந்நிலவுலகில் ப்ரவர்த்திப்பிக்கப் பட்டது. ஆகவே ஆசார்ய பரம்பரையில் முதல் ஸ்தானம் எம்பெருமானுடையதாக ஆயிற்று. ஆனது பற்றியே *லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் ..........வந்தே குருபரம்பராம் * என்று ஆழ்வான் அநுஸந்தித்தருளினர்.

இந்த ரஹஸ்யத்ரயம் சொல்வடிவில் சுருங்கி யிருந்தாலும் ஆழ்ந்த அரிய பெரிய பொருள்களை யுடையதாதலால் ஸகல சாஸ்த்ரக் கடல்களையும் கரைகண்டவர்களான நம் பூருவாசாரியர்கள் இதன் ஆழ்பொருள்களை யறிந்து பரமகிருபையாலே தம்மடி பணிந்தார்க்கும் அருமருந்தாக உபதேசித்து வந்தார்கள். எம்பெருமானர்க்கு முன்னேயிருந்த ஆசிரியர்கள் இந்த ரஹஸ்யத்ரயத்தின் சீரிய பொருள்களை மிகவும் சேமித்து வைத்துக்கொண்டிருந்து ஏகாந்தமாகவே உபதேசித்துப் போந்தார்கள். எம்பெருமானர் தாம் தம்முடைய விசாலமான திருவுள்ளத்தினல் ஸகல ஸம்ஸாரிகள் பக்கலிலும் கருணை கரைபுரண்டு வரம்பு கடந்து தாம் உபதேசித்தும் தம்முடைய சிஷ்யர்களைக் கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். இவ்விஷயம் மணவாள மாமுனிகளால் உபதேச ரத்தினமாலையில்

* ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால் — பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லா மாரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின் * என்கிற பாசுரத்தினுல் மூதலீக்கப்பட்டது.

அவ்வெம்பெருமானுர் காலந்தொடங்கி ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் விரிவாகவே உபதேசிக்கப் பெற்ருலும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்த விசேஷங்களை அக்காலத்தில் க்ரந்தரூபமாக்கிப் பின்புள்ளார்க்கும் உபயோகப் படுமாறு உபகரித்தவர்கள் யாருமில்லையென்றே சொல்லலாம், ரஹஸ்யத்ரய வியாக்கியானமாகக் கூரத்தாழ்வான் ஒரு க்ரந்தம் அருளிச் செய்திருந்தாரென்று ஸ்ரீரஹஸ்யத்ரய ஸாரத்தின் மூலமாக ஊஹிக்க இடமுண்டு. ஆனுல் அந்த க்ரந்தம் லுப்தமேயாயிற்று.

அவருடைய திருக்குமாரரான பட்டர் அருளிச் செய்த அஷ்டச்லோகியென்கிற க்ரந்தமே ரஹஸ்யத்ரய விவரணமான க்ரந்தங்களுள் முதன்மை பெற்று விளங்குகின்றது.

எட்டு ச்லோகங்கள் கொண்டதனுல் அஷ்டச்லோகி என்று இந்நூலுக்குத் திருநாமமாயிற்று.

இதில், முதல் நான்கு ச்லோகங்களினுல் திருமந்த்ரத்தின் அர்த்தம் விவரிக்கப்படுகிறது. மேலிரண்டு ச்லோகங்களினுல் த்வயத்தின் அர்த்தம் அறிவிக்கப்படுகின்றது. அதன் மேலிரண்டு ச்லோகங்களினுல் சரமச்லோகப் பொருள் தெரிவிக்கப்படுகின்றது. ஆக எட்டு ச்லோகங்களாலும் ரஹஸ்யங்கள் மூன்றினுடையவும் ஆழ்ந்த அர்த்தங்கள் அழகாக நிருபிக்கப்பட்டனவாயின.

“பெரிய கனகவரையைச் சிறிய கடுகினிலடைத்து வைப்பன்” [திருவரங்கக் கலம்பகம்] என்ருற்போல அரிய பெரிய அர்த்த விசேஷங்கள் எட்டு ச்லோகங்களில் அடக்கப் பட்டிருப்பதால் அனைவர்க்கும் எளிதாகப் பொருள் விளங்குமாறு ஓர் உரை அமையவேண்டுவது இன்றியமையாததலால் பூருவர்கள் காட்டியருளின வழியிலே உரிய தெளிவுரை யொன்று எழுதப்படுகின்றது.

**இந்த வியாக்கியானம் பஹுதான்யஸ்ரீ மாசி மாதத்தில் திருக்கோட்டியூரில் நான்கு நாள் வஸிக்க நேர்ந்தபோது அங்கு எழுதப் பெற்றது அடியேனுடைய மஹாபாக்யம்.**

ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கரார்ய தாஸன்,

அவதாரிகை முற்றிற்று.

பட்டர் தனியன்

ஸ்ரீபராசர பட்டார்ய: ஸ்ரீரங்கேச புரோஹித:,

ஸ்ரீவத்ஸாங்க ஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே [மேஸ்து பூயஸே,

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த

# அ ஷ் ட ச் லோ கி

अकारार्थो विष्णुर्जगदुदयरक्षाप्रलयकृत्
मकारार्थो जीवस्तदुपकरणं वैष्णवमिदम् ।
उकारोऽनन्यार्हं नियमयति संबन्धमनयोः
त्रयीसारस्त्र्यात्मा प्रणव इममर्थं समदिशत् ॥ १ ॥

அகாரார்த்தோ விஷ்ணுர் ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத்
மகாரர்த்தோ ஜீவஸ் ததுபகரணம் வைஷ்ணவமிதம்,
உகாரோநந்யார்ஹம் நியமயதி ஸம்பந்தமநயோ:
த்ரயீஸாரஸ் த்ர்யாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிசத். (1)

| | |
|---|---|
| ஜகத் உதய ரக்ஷா ப்ரளய க்ருத் | ஸகல லோகங்களுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்தருள்பவனை |
| விஷ்ணு: | ஸர்வவ்யாபக ஸர்வேச்வரன் |
| அகாரார்த்த: | (ப்ரணவத்திலுள்ள) அகாரத்தின் பொருள்; |
| ஜீவ: | (ஞானத்தை வடிவாகவுடைய) ஜீவாத்மா |
| மகாரார்த்த: | மகாரத்தின் பொருள்; |
| தத் இதம் | மேற்சொன்ன இந்தஜீவாத்மவஸ்துவானது |
| வைஷ்ணவம் உபகரணம் | எம்பெருமானுக்கே உரித்தான சேஷவஸ்து (என்பது லுப்த சதுர்த்தியின் பொருள்) |
| உகார: | (ப்ரணவத்தின் இடையிலுள்ள) உகாரமானது |
| அநயோ: | இந்த ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குண்டான |
| ஸம்பந்தம் | ஸம்பந்தத்தை |
| அநந்யார்ஹம் நியமயதி | பதிபத்நீபாவமாகிறஸம்பந்தம் போல் ஐகாந்திகமாகக் கட்டுப்படுத்துகின்றது. |
| இமம் அர்த்தம் | ஆக இங்ஙனே விவரிக்கப்பட்ட பொருளை |
| த்ரயீஸார: | மூன்று வேதங்களினுடையவும் ஸாரபூதமாயும் |
| த்ரி ஆத்மா | மூன்று அக்ஷரமாயும் மூன்று பதமாயு மிராநின்ற |
| ப்ரணவ: | ஓங்காரமானது |
| ஸமதிசத் | தெரிவித்தது. |

* * * இந்த ச்லோகத்தினால் ப்ரணவத்தின் பொருள் விவரிக்கப் படுகிறது. திருமந்திரமானது எட்டு அக்ஷரமாயும் மூன்று பதமாயுமுள்ளது. அவற்றுள் ப்ரணவம் [ஓங்காரம்] முதற் பதமாக வுள்ளது. அகாரமும் உகாரமும் சேர்ந்து குணஸந்தி பெற்று 'ஓ' என்று ஆகி, அதற்கு அடுத்த படியாக மகாரம் இருக்கிற படியால் இந்த ப்ரணவமானது அகார - உகார - மகாரங்களென்கிற மூன்று திருவெழுத்துக்களாக வுள்ளது.

சுருதியில் 'ஓமிதி ஏகாக்ஷரம்' என்று ப்ரணவத்தை ஓர் அக்ஷரமாகவே சொல்லியிருக்க, மூன்று அக்ஷரமாகக் கூறுவது தகுதியோவென்று சிலர் சங்கிக்கக் கூடும். கேண்மின். இதில் ஸம்ஹிதாகாரம் அஸம்ஹிதாகாரம் என்று இரண்டு

படியுண்டு. ஸந்திபெற்ற ஆகாரத்தை ஸம்ஹிதாகாரமென்றும், ஸந்திபெருத
ஆகாரத்தை அஸம்ஹிதாகாரமென்றும் சொல்லுவது. அஸம்ஹிதாகாரத்தை
யிட்டுப்பார்க்கும்போது ப்ரணவமானது மூன்று அக்ஷரமாகவும், ஒவ்வொரு
அக்ஷரமும் ஒவ்வொரு பதமாகையாலே மூன்று பதமாகவு மிருக்கும். ஸம்ஹிதா
காரத்தை யிட்டுப் பார்க்கும்போது ஒரே யெழுத்தாய் ஒரே பதமாயிருக்கும்.
ஆகவே "ஓமித்யேகாக்ஷரம்" என்று ச்ருதி சொன்னதானது ஸம்ஹிதாகாரத்திலே
நோக்காகச் சொன்னதென்று கொள்ளக்கடவது. ஆக இவ்வளவும் த்ர்யாத்மா
என்பதை விவரித்தது.

இனி த்ரயீஸார: என்பது விவரிக்கப்படுகிறது. இந்த ப்ரணவத்தின் அக்ஷரங்
களான அகார உகார மகாரங்களானவை ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம்
என்கிற மூன்று வேதங்களில் நின்றும் தோன்றினவையா யிருக்கும். எங்ஙனே
யென்னில், அந்த மூன்று வேதங்களில் நின்றும் பூ:, புவ:, ஸுவ: என்கிற
வ்யாஹ்ருதிக ளெனப்படுகிற மூன்றையும் ஸர்வேச்வரன் தோன்றுவித்து அவற்
றைத் தன் ஸங்கல்பத்தாலே ஓட வைத்து அவற்றில் நின்றும் அகார உகார
மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களையும் அடைவே தோன்றும்படி பண்ணி இப்படி
ஸமுத்தரித்தபடியினலே மூன்றெழுத்தும் மூன்று வேதங்களின் ஸாரமாயிருக்கும்.

ஆக இப்படிப்பட்ட ப்ரணவமானது அக்ஷரத்ரயத்தாலும் சொல்லுகிற
பொருளை இந்த ச்லோகத்தின் மூன்று பாதங்கள் விவரிக்கின்றன. முதல் பாதம்
அகாரார்த்த விவரணம். ஸகல ஜகத்துக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை
நிர்வஹிக்குமவனை எம்பெருமானைச் சொல்லுகிறது அகாரம். ப்ரக்ருதிசக்தி
யென்றும் தாதுசக்தி யென்றும் இரண்டு சக்திகள் கொள்ளப் படுகின்றன. ப்ரக்ருதி
யாவது ஸ்வபாவம். அகாரத்தின் ஸ்வபாவம் எப்படிப்பட்ட தென்றால் ⁕ அகர
முதலவெழுத்தெல்லாம் ⁕ என்கிறபடியே ஸகல சப்தங்களுக்கும் தான் காரண
மாயிருக்கை அகாரத்தின் ஸ்வபாவமாகும். இந்த ஸ்வபாவத்துக்குச் சேர்ந்ததான
ஸ்வபாவம் எம்பெருமான் பக்கலிலே யிராநின்றது. அதாவது எல்லா ஜகத்துக்கும்
தான் காரணமாயிருக்கை. ஆக இந்த ஸ்வபாவ ஸாம்யத்தையிட்டு ஸகல
ஜகத்காரண பூதனை ஸர்வேச்வரன் அகாரார்த்தமாவன். இனி தாது சக்தியி
னலே ஸர்வரக்ஷகனை ஸர்வேச்வரன் என்கிற அர்த்தம் தேறும். எப்படி
யென்னில், ⁕அவ-ரக்ஷணே⁕ என்கிறபடி ரக்ஷணத்தைப் பொருளாக வுடைத்தான
'அவ' என்னும் தாதுவடியாக அகாரம் நிஷ்பத்தியடைந்தபடியாலே. ஆக
இவ்விரண்டு முறைகளையும் திருவுள்ளம்பற்றி "ஜகதுதயரக்ஷாக்ருத் விஷ்ணு:
அகாரார்த்த:" எனப்பட்டது. ஜகதுதய ரக்ஷைகளோடு கூட ப்ரளயத்தையும்
சேர்த்துப் பேசியிருப்பதானது—ஸ்ருஷ்டிஸ்திதிகளுக்குக் கர்த்தா என்ற போதே
ஸம்ஹாரத்திற்கும் அவனே கர்த்தாவாக அர்த்தாத் ஸித்திக்குமாகையாலும்
⁕யதோ வா இமானி பூதானி⁕ இத்யாதி ச்ருதியிலே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்க
ளாகிற மூன்றையும் பரப்ரஹ்ம லக்ஷணமாகச் சொல்லி யிருக்கையாலும்.

இனி மகாரார்த்தம் சொல்லுகிறது [மகாரார்த்தோ ஜீவ:] என்று. 'மகாரம்
இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞான வாசியுமா யிருக்கையாலே ஆத்மாவைச்
சொல்லுகிறது." என்றார் முமுக்ஷுப்படியில் பிள்ளை யுலகாசிரியரும். அக்ஷர
ராசியில் (ஹல்லெழுத்துக்களில்) ஒவ்வோரக்ஷரத்தினலும் ஒவ்வொரு தத்துவம்
கூறப்படுகிறதாகச் சொல்லிவரு மடைவில் க காரம் முதல் பகாரம் வரையிலு
முள்ள இருபத்து நான்கு அக்ஷரங்களாலும் ⁕ பொங்கைம்புலனும் பொறியைந்தும்
கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானங்காரமனங்களே ⁕
என்னப்பட்ட இருபத்துநான்கு தத்துவங்கள் கூறப்பட்டன வாகவும், இருபத்
தைந்தாவது அக்ஷரமான மகாரமானது இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவாத்

மாவைச் சொல்லுகிறதாகவும் கூறப்பட்டிருக்கிறது. அன்றியும் மகாரமானது "மந - ஜ்ஞாநே" (அல்லது) "மநு - அவபோதநே" என்கிற தாது வடியாகத் தேறினதாகையாலும் ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஞானத்தையே குணமாகவுடையனுமான ஆத்மாவைச் சொல்லிற்றுகிறது. ஆக அகாரமகாரங்களின் அர்த்தம் விவரிக்கப்பட்டதாயிற்று.

இனி, "ததுபகரணம் வைஷ்ணவமிதம்" என்று லுப்த சதுர்த்தியின் அர்த்தம் சொல்லப்படுகிறது. லுப்த சதுர்த்தியாவது என்னென்னில்; இந்த ப்ரணவத்தில் முதலக்ஷரமான அகாரத்தின்மேல் சதுர்த்தீ விபக்தி ஏறியிருந்து அது [வைதிகப்ரக்ரியைக்குரிய] ஒரு ஸூத்ரத்தினல் லோபமடைந்திருப்பதாகக் கொள்ள வேண்டிய அவசிய முள்ளது. ஒரு விபக்தியில்லை யென்றுல் முன்னும் பின்னு முள்ள பதங்கள் அந்வயிக்கமாட்டா ஆதலால் ஒரு விபக்தி ஏறியிருந்ததாகவும் அது சாஸ்த்ரப்படி லோபமடைந் திருப்பதாகவும் கொள்ளவேணும். விபக்திகள் பல இருக்க, சதுர்த்தீவிபக்திதான் ஏறிக் கழிந்ததென்று கொள்ளவேண்டிய நியாமகம் ஏதென்னில், இத்திருமந்த்ரத்தில் மேலே யுள்ள நாராயண பதத்திற்கு இந்த அகாரம் ஸங்க்ரஹமென்றும், இந்த அகாரத்திற்கு நாராயண பதம் விவரணமென்றும் ஏற்பட்டிருக்கையாலே, விவரணமான அதில் சதுர்த்தீவிபக்தி வ்யக்தமாக இருக்கக் காண்கையாலே அதன் ஸங்க்ரஹமான அகாரத்திலும் அந்த சதுர்த்தீ விபக்தியே தான் இருக்கத்தகும். அதற்கு, சேஷத்வம் அர்த்தம் அகார வாச்யனை ஈச்வரனுக்கு மகாரவாச்யமான வஸ்து சேஷபூதம் என்றதாயிற்று.

"ததுபகரணம் வைஷ்ணவமிதம்" என்கிற விதற்குப் பலபடியாக நிர்வஹிப்பர்கள். "தத் இதம் வைஷ்ணவமுபகரணம்" என்று அந்வயிப்பது எளிது. கீழே (ஜீவ꞉) என்று பும்லிங்கத்தாலே சொல்லிவைத்து உடனே இங்கு (தத்இதம்) என்று நபும்ஸகலிங்கத்தாலே நிர்த்தேசிப்பதேன்? என்னில், இவ்வாத்மவஸ்து அசேதந நிர்விசேஷமாக இருந்து சேஷப்படக் கூடியது என்று காட்டுவதற்காக.

இனி மூன்றுவது பாதம் உகாரத்தை விவரிக்கிறது. உகாரத்திற்கு அவதாரணம் அர்த்தம். ஏவ என்றிருந்தால் என்ன அர்த்தம் கொள்ளக்கூடுமோ அந்த அர்த்தமே உகாரத்திற்குக் கொள்ளவேணும். இங்கு "மகாரார்த்த꞉ ஜீவ꞉ ஆயைவ" என்றதாகி, சேதநன் எம்பெருமானொருவனுக்கே சேஷப்பட்டவன், பிறர்க்கு உரியவனல்லன் என்றதாகத் தேறிநிற்கும். ஆக இந்த ச்லோகத்தினல் ப்ரணவார்த்தம் விவரித்ததாயிற்று. ... ... ... ... (1)

मन्त्रब्रह्मणि मध्यमेन नमसा पुंसः स्वरूपं गतिः
गम्यं शिक्षितमीक्षितेन पुरतः पश्चादपि स्थानतः ।
स्वातन्त्र्यं निजरक्षणं समुचिता वृत्तिश्च नान्योचिता
तस्यैवेति हरेर्विविच्य कथितं स्वस्यापि नार्हं ततः ॥२॥

மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸ꞉ ஸ்வரூபம் கதிர்
கம்யம் சிக்ஷிதமீக்ஷிதேந புரத꞉ பச்சாதபி ஸ்தாநத꞉,
ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதா வ்ருத்திச்ச நாந்யோசிதா
தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதிதம் ஸ்வஸ்யாபி நார்ஹம் தத꞉ (2)

| | |
|---|---|
| மந்த்ரப்ரஹ்மணி | மிகச் சிறந்த மந்த்ரமாகிய திருவஷ்டாக்ஷரத்தில் |
| மத்யமேந | இடையிலுள்ளதாய் |
| புரதஃ ஈக்ஷிதேந நமஸா | முன்னேயுள்ள பிரணவத்தை நோக்கி அத்தோடு சேர்ந்ததான நமஸ்ஸினுல் |
| பும்ஸஃ | ஜீவாத்மாவினுடைய |
| ஸ்வரூபம் | ஸ்வரூபமானது |
| சிக்ஷிதம் | சிக்ஷிக்கப்பட்டது ; |
| ஸ்தாநதஃ ஈக்ஷிதேந நமஸா | ஸ்வஸ்தானத்திலேயே ஆவ்ருத்திபெற்ற நமஸ்ஸினுல் |
| கதிஃ சிக்ஷிதா | உபாயம் சிக்ஷிக்கப்பட்டது ; |
| பச்சாத் அபி ஈக்ஷிதேந நமஸா | பின்னேயுள்ள நாராயணுய பதத்தோடு சேர்ந்த நமஸ்ஸினுல் |
| கம்யம் சிக்ஷிதம் | உபேயம் (பலன்) சிக்ஷிக்கப்பட்டது. |

(இப்படி சிக்ஷிக்கப்பட்டதனுல் தேறின பொருள்கள் எவையென்னில்,)

| | |
|---|---|
| ஸ்வாதந்த்ர்யம் | ஸ்வதந்த்ரமாயிருக்குந்தன்மை யென்ன |
| நிஜரக்ஷணம் | ஸ்வரக்ஷணமென்ன |
| ஸமுசிதா வ்ருத்திஃ ச | சேஷத்வத்துக்கு இணங்கின கைங்கர்யவ்ருத்தி யென்ன ஆகிய இவை |
| தஸ்ய ஹரேஃ ஏவ | அந்த எம்பெருமானுக்கே உரியவை; |
| அந்யோசிதா ந— | மற்றையோர்க்கு உரியவையல்ல; |
| இதி | என்று இவ்வண்ணமாக |
| விவிச்ய கதிதம் | வகுத்துக்கூறப்பட்டதாயிற்று; |
| ததஃ | ஆதலால் |
| ஸ்வஸ்ய அபி அர்ஹம் ந | கீழ்ச்சொன்ன மூன்றும் அந்யருள் அந்யதமனுன தனக்கும் சேர்ந்தவையல்ல (என்பது தேறிற்று.) |

* * * இந்த ச்லோகம் நமச்சப்தார்த்தத்தை விவரிக்கிறது. திருமந்த்ரத்தில் இடையிலுள்ள நமஸ்ஸானது ஸகண்ட நமஸ்ஸென்றும் அகண்ட நமஸ் என்றும் இருவகையாகக் கொள்ளப்படுகிறது. (ந) என்றும் (மஃ) என்றும் பிரித்தால் அப்போது ஸகண்ட நமஸ்ஸென்கிறது; பிரிக்காமல் முழுச் சொல்லாகக் கொண்டால் அகண்ட நமஸ்ஸென்கிறது. பிரித்துக் கொள்ளும்போது (ம:) என்பது ஷஷ்டீ விபக்தியை முடிவாக வுடைத்தான மகார மாதலால் 'தனக்கு' என்று பொருள்பட்டு நிற்கிறது. எனவே ஸ்வார்த்தத்வம் தோற்றிநின்றது. எனக்கு நான் உரியேன் என்று சொன்னதாக ஆயிற்று. (ந) என்று அது கழிக்கப்பட்டு எனக்கு நான் உரியேனல்லேன் என்றதாயிற்று. இந்த நமஸ்ஸானது விரோதியைக் கழிப்பதாகும். ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் என்ற மூன்றும் சேதநர்களுக்கு மிகவும் சுத்தமாக இருக்க வேண்டியவை. இம் மூன்றுக்கும் விரோதிகள் ஏற்படுவதுண்டு. அந்த விரோதிகளைக் கழிப்பது நமஸ்ஸின் காரியமாகும். எனவே ஸ்வரூப விரோதியையும் உபாய விரோதியையும் உபேய விரோதியையும் கழித்து அந்த ஸ்வரூப - உபாய - புருஷார்த்தங்கள் மூன்றையும் சோதித்துக் கொடுப்பது நமஸ்ஸு என்றதாயிற்று. கீழே ப்ரணவத்தினுல் தேறின ஸ்வரூபத்திற்கு எது விரோதியோ அது ஸ்வரூப விரோதி யெனப்படும். சேஷத்வமாகிற ஸ்வரூபத்திற்கு அஹங்கார மமகாரங்கள் விரோதி. எம்பெருமான் கையையே பார்த்திருக்கையாகிற உபாயத்திற்கு ஸ்வரக்ஷணத்தில் தான் அந்வயிப்பது விரோதி. பகவத்கைங்கர்யமாகிற உபேயத்திற்கு—அதில் ஸ்வபோக்த்ருத்வ புத்தி செல்லுவது விரோதி. ஆக இம்மூன்று விரோதிகளையும் இந்த நமஸ்ஸு எங்ஙனே கழிக்கின்றதென்ருல் அதை இந்த ச்லோகம் நன்கு நிரூபிக்கின்றது;

இந்த நமஸ்ஸானது நடுவிலிருப்பதால் கீழோடே அந்வயித்தும் மேலோடே அந்வயித்தும் ஸ்வஸ்தானத்திலேயே ஆவ்ருத்தி பெற்றும் மூன்று விரோதிகளையும் கழிக்கிறதாயிற்று. கீழோடே அந்வயித்து (ஓம் நமஃ) என்ரும், மேலோடே அந்வயித்து (நாராயணுய நமஃ) என்ரும், ஸ்வஸ்தானத்திலேயே ஆவ்ருத்தி பெற்று

(நமோ நமஃ) என்றும்,. ஸகண்ட நமஸ்ஸானது ப்ரணவத்தோடே அந்வயித்து (ஓம் நமஃ) என்றாகி, "ம், ஆயைவ, மஃ ந" என்றபடியாம். சேதநன் எம்பெருமானுக்கே சேஷபூதன், தனக்கு உரியனல்லன் என்றதாகும். ஆக ஸ்வசேஷத்வ நிவ்ருத்தி யானபடியாலே ஸ்வரூபம் சோதிக்கப்பட்டதாயிற்று.

[ஸ்தாநதஃ] ஸ்வஸ்தானத்திலேயே ஆவ்ருத்தி பெற்ற நமஸ்ஸாலே உபாயம் சோதிக்கப்படுகிறது. [நமோ நமஃ] என்கிறவிதில் முந்தினது அகண்ட நமஸ்ஸு; பிந்தினது ஸகண்ட நமஸ்ஸு. அகண்ட நமஸ்ஸானது உபாயத்தைச் சொல்லும். உபாயத்தில் எனக்கு அந்வயம்இல்லைஎன்றதாகி உபாயம்சோதிக்கப்பட்டதாயிற்று.

[பச்சாதபி] மேலுள்ள 'நாராயணாய' என்பதோடு அந்வயம் பெற்ற (ஸகண்ட) நமஸ்ஸானது உபேயத்தை [அதாவது, பலனை] சோதிக்கின்றது. எப்படியென்னில், ஸர்வசேஷியான நாராயணனுடைய உகப்புக்காகவே கைங்கரியம் செய்யா நின்றேன்; என்னுகப்புக்காக வன்று என்றதாகி, கைங்கரியத்தில் ஸ்வார்த்தத்வபுத்தியைத் தவிர்த்ததாயிற்று. ஆகவிப்படி சிக்ஷித்ததனால் தேறின பலன்களை உத்தரார்த்தத்தாலே அருளிச் செய்கிறார்.

[ஸ்வாதந்த்ர்யம் தஸ்யைவ ஹரேஃ] இது 'ஓம் நமஃ' என்ற அந்வயத்தினால் தேறின பலன். பாரதந்த்ரியம் தேறிற்று என்றபடி. [நிஜரக்ஷணம் தஸ்யைவ] என்னுடையதான ரக்ஷணமும் அப்பெருமானுடையதே, எனக்கில்லை. இது 'நமோநமஃ' என்ற அந்வயத்தினால் தேறிற்றென்க. [ஸமுசிதா வ்ருத்திச்ச தஸ்யைவ] ஸ்வரூப ப்ராப்தமான கைங்கர்ய வ்ருத்தியும், அப்பெருமானுடைய உகப்புக்கே, என்னுகப்புக்கன்று. இது நாராயணாய நமஃ என்ற அந்வயத்தினால் தேறியதென்க. [ததஃ ஸ்வஸ்யாபி நார்ஹம்] கீழ்ச் சொன்ன ஸ்வாதந்த்ரியம் முதலிய மூன்றும் எம்பெருமானுக்கும் நமக்குமாக உபயஸாதாரணமு மன்று என்றபடி. [இதி விவிச்ய கதிதம்] என்று முடிப்பது. ... ... ... ... ... (2)

अकारार्थायैव स्वमहमथ मह्यं न निवहाः
नराणां नित्यानामयनमिति नारायणपदम् ।
यमाहास्मै कालं सकलमपि सर्वत्र सकलासु
अवस्थास्वाविःस्युः मम सहजकैङ्कर्यविधयः ॥ ३ ॥

அகாரார்த்தாயைவ ஸ்வமஹமத மஹ்யம் ந நிவஹாஃ
நராணாம் நித்யாநாமயநமிதி நாராயணபதம்,
யமாஹாஸ்மை காலம் ஸகலமபி ஸர்வத்ர ஸகலாஸு
அவஸ்தாஸ்வாவிஸ்ஸ்யுர் மம ஸஹஜகைங்கர்ய விதயஃ (3)

| | |
|---|---|
| அஹம் அகாரார்த்தாய ஏவ ஸ்வம் | மகராவாச்யனான நான் அகாரவாச்யனான நாராயணனுக்கே சேஷபூதன் (என்று ப்ரணவார்த்தத்தை அனுவதித்தபடி) |
| அத | அதற்குமேல், |
| அஹம் மஹ்யம் ந | நான் எனக்கு உரியேனல்லேன் (என்று நமஃ பதார்த்தத்தை அநுவதித்தபடி) |
| நாராயணபதம் | நாராயணபதமானது |
| நராணாம் - நித்யாநாம் நிவஹாஃ (தேஷாம்) அயநம் இதி | நித்ய வஸ்துக்களினுடைய திரள்களுக்கு ஆதார பூதன் நாராயணன் (என்று தத்புருஷ ஸமாஸத்தாலும்) |
| நராணாம் நித்யாநாம் நிவஹாஃ (யஸ்ய) அயநம் | நித்ய வஸ்துக்களினுடைய திரள்களை ஆதாரமாக வுடையவன் நராயணன் (என்று பஹுவ்ரீஹிஸமாஸத்தாலும்) |

| | | | |
|---|---|---|---|
| யம் ஆஹ | யாவனொருவ எம்பெருமானைச் சொல்லுகிறதோ | மம | என்னுடைய |
| அஸ்மை | இந்த எம்பெருமானுக்கு | ஸஹஜ கைங்கர்ய விதய: | இயற்கையான அடிமைத் தொழில்கள் |
| காலம் ஸகலம் அபி | எல்லாக் காலங்களிலும் | ஆவிஸ்ஸ்யு: | விளையக்கடவன. |
| ஸர்வத்ர | எல்லா விடங்களிலும் | | |
| ஸகலாஸு அவஸ்தாஸு | எல்லா அவஸ்தைகளிலும் | | (என்று சரமபதத்தின் அர்த்தத்தை அநுவதித்தபடி.) |

* * * இந்த ச்லோகத்தினுல் திருமந்திரத்திலுள்ள மூன்று பதங்களினுடையவும் அர்த்தத்தைச் சேரப்பிடித்து அநுஸந்தித்து ஸ்வாநுபவமுகத்தாலே வெளியிடுகிருர். [அகாரார்த்தாயைவ ஸ்வமஹம்] இது ப்ரணவத்தின் பொருளைத் திரட்டிச் சொன்னபடி. அகாரம், லுப்தசதுர்த்தி, உகாரம், மகாரம் ஆகிய நான்கினுடையவும் அர்த்தம் அடைவே பொதிந்திருக்கிறபடி பாரீர். [மஹ்யம் ந] இது நம:பதத்தின் பொருளைச் சொன்னபடி. இனி, "நிவஹா:" என்று தொடங்கி "யமாஹ" என்னுமளவும் நாராயண சப்தார்த்தம் சொன்னபடி. நாராயண பதத்திற்கு தத்புருஷ ஸமாஸமும் பஹுவ்ரீஹி ஸமாஸமுமாக இரண்டு வகையான வ்யுத்பத்திகளுண்டு. முமுக்ஷுப் படியில் "நாராயணனென்றது - நாரங்களுக்கு அயநமென்றபடி." என்கிற சூர்ணையால் தத்புருஷ ஸமாஸத்தைக் காட்டி, மேலே "அங்ஙனன்றிக்கே இவை தன்னை ஆச்ரயமாகவுடைய னென்னவுமாம்" என்கிற சூர்ணையால் பஹுவ்ரீஹி ஸமாஸத்தையும் காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். அவ்விரண்டு ஸமாஸத்தையும் இங்கே ஸம்க்ஷேபேண காட்டுகிருர். தத்புருஷ ஸமாஸவிவக்ஷையில் மூலத்தில் தேஷாம் என்கிற பதத்தைக் கூட்டிக்கொள்வது. பஹுவ்ரீஹி ஸமாஸவிவக்ஷையில் யஸ்ய என்கிற பதத்தைக் கூட்டிக் கொள்வது. (ர) என்கிற சொல் அழியக்கூடியதென்கிற பொருளைத் தரும். (நர) என்கிற சொல் அழியாததென்கிற பொருளைத் தரும். (நார) என்று நித்யவஸ்துக்களின் ஸமூஹத்தைச் சொல்லுகிறது. (ஸமூஹார்த்தத்தில் அண்ப்ரத்யயமும் ஆதிவ்ருத்தியும் வந்திருப்பதாகக் கொள்க.) அதன்மேல் பஹுவசனமும் ஏறி நித்யவஸ்துக்களின் ஸமூஹமும் பலவென்கிறது. இவற்றுக்கு ஆச்ரயபூதன் நாராயணனென்றதாகும். உபய விபூதியிலுமுள்ள ஸகல வஸ்துக்களுக்கும் ஆதார பூதனென்றதாயிற்று.

உபய விபூதியிலுமுள்ள ஸகல வஸ்துக்களும் அழியாத வஸ்துக்களோ? அநித்ய வஸ்துக்களுமில்லையோ வென்னில்; அநித்ய வஸ்துக்கள் எதுவுமில்லை, எல்லாம் நித்யவஸ்துக்களேயாம். ஸ்வரூபதோநித்யங்களென்றும் ப்ரவாஹதோ நித்யங்களென்றும் நித்யவஸ்துக்கள் இரு வகைப்படும். ஒருநாளும் உத்பத்தி விநாசமேயில்லாத வஸ்துக்கள் ஸ்வரூபதோ நித்யங்களாம். உத்பத்தி விநாசங்கள் இருக்கச் செய்தேயும் முன்புண்டான நாமரூப லிங்காதிகள் மாருமலிருக்கப்பெற்ற வஸ்துக்கள் ப்ரவாஹ நித்யங்களெனப்படும். ஆக இப்படிப்பட்ட ஸகல பதார்த்தங்களுக்கும் இருப்பிடமானவன் நாராயணனென்று தத்புருஷஸமாஸத்தால் தேறின பொருள். நாரங்களை ஆச்ரயமாக வுடையவன் என்கிற பொருள் பஹுவ்ரீஹி ஸமாஸத்தால் தேறும். ஸகல வஸ்துக்களும் எம்பெருமானிடத்திலே

யிருக்கின்றன வென்றும், ஸகல வஸ்துக்களிலும் எம்பெருமான் இருக்கிருனென்றும் உபய ஸமாஸத்தாலும் தேறிநின்றது. ஆக நாராயண பதார்த்தத்தைச் சொல்லி நின்று, [அஸ்மை காலம் ஸகலமபி] என்று தொடங்கி ச்லோக சேஷத்தினுல் நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தீவிபக்தியின் பொருளை நிருபித்தருளுகிருர். ❋ ஒழிவில் காலமெல்லா முடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டு நாம் ❋ என்கிறபடியே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் கைங்கர்ய மநுவர்த்திக்க வேணுமென்கிறப்ரார்த்தனையே சதுர்த்தியின்பொருள் என்றதாயிற்று.

“காலம் ஸகலமபி” என்ற விடத்தில் த்விதீயை ❋ காலாத்வநோரத்யந்த ஸம்யோகே த்விதீயா ❋ என்கிற பாணிநிஸூத்ரத்தின்படி பொருந்தும். (3)

देहासक्तात्मबुद्धिर्यदि भवति पदं साधु विद्यात्तृतीयं
स्वातन्त्र्यान्धो यदि स्यात् प्रथममितरशेषत्वधीश्चेद्द्वितीयम् ।
आत्मत्राणोन्मुखश्चेन्नम इति च पदं बान्धवाभासलोलः
शब्दं नारायणाख्यं विषयचपलधीश्चेच्चतुर्थीं प्रपन्नः ॥ ४ ॥

தேஹாஸக்தாத்மபுத்திர் யதி பவதி பதம் ஸாது வித்யாத் த்ருதீயம்
ஸ்வாதந்த்ர்யாந்தோ யதி ஸ்யாத் ப்ரதமம் இதரசேஷத்வதீச்சேத் த்விதீயம்,
ஆத்மத்ராணோந்முகச் சேத் நம இதி ச பதம் பாந்தவா பாஸலோலஃ
சப்தம் நாராயணக்க்யம் விஷயசபலதீச் சேத் சதுர்த்தீம் ப்ரபந்நஃ (4)

| | |
|---|---|
| தேஹ ஆஸக்த ஆத்மபுத்திஃ பவதி யதி | தேஹத்திலே யூன்றின ஆத்ம புத்தியை யுடையவனுகில் [தேஹாத்ம ப்ரமமுடையவனுகில்] |
| த்ருதீயம் பதம் ஸாது வித்யாத் | ப்ரணவத்தில் மூன்ருவது பதமான மகாரத்தை நன்கு நோக்கக் கடவன்; |
| ஸ்வாதந்த்ர்ய அந்தஃ ஸ்யாத் யதி | ஸ்வதந்த்ராத்ம ப்ரமமுடையவனுகில் |
| ப்ரதமம் பதம் வித்யாத் | முதல் பதமான (லுப்த சதுர்த்தியோடு கூடின) அகாரத்தை நோக்கக் கடவன்; |
| இதர சேஷத்வதீஃ சேத் | அந்ய சேஷத்வ ஜ்ஞானமுடையவனுகில் |
| த்வீதீயம் பதம் வித்யாத் | இரண்டாவது பதமான உகாரத்தை நோக்கக் கடவன்; |
| ஆத்மத்ராண உந்முகஃ சேத் | ஸ்வரக்ஷணத்தில் ஊக்கமுடையவனுகில் |
| நமஃ இதி பதம் வித்யாத் | நமஃ என்கிற நடுப்பதத்தை நோக்கக் கடவன்; |
| பாந்தவாபாஸ லோலஃ | ஆபாஸ பந்துக்களிடத்தில் ஆஸக்தியுடையவன் |
| நாராயணக்க்யம் சப்தம் வித்யாத் | நாராயண பதத்தை நோக்கக் கடவன்; |
| விஷய சபலதீஃ சேத் | சப்தாதி விஷயங்களில் ஊன்றினபுத்தியையுடையவனுகில் |
| சதுர்த்தீம் வித்யாத் | நாராயணபதத்தின் மேலுள்ள வ்யக்தசதுர்த்தியை நோக்கக்கடவன். |
| (இப்படியெல்லாம் நோக்கவேண்டிய அதிகாரி யாவனென்னில்) | |
| ப்ரபந்நஃ | ப்ரபந்நாதிகாரி. |

❋ ❋ ❋ திருமந்த்ரம் சப்தசக்தியாலும் அர்த்தசக்தியாலுமாக இரண்டு வகையாலும் ரக்ஷணம் செய்யக்கூடியது. திருமந்திரத்தைக் கொண்டு ஜபம் பண்ணியும் ஹோமம் பண்ணியும் காரியங் கொள்ளப் பார்க்கிற உபாஸகர்கள் பெறும் ரக்ஷணம்

சப்தசக்தியாலே விளையும் ரக்ஷணமாம். எம்பெருமானே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நர்கள் பெறும் ரக்ஷணம் அர்த்த போதனத்தாலே விளையும் ரக்ஷணமாம். இரண்டாவதானஇந்த ரக்ஷணக்ரமத்தை இந்த ச்லோகத்தினால் அருளிச்செய்கிறார்.

இதன் கருத்தாவது:—தேஹமே ஆத்மாவென்று ஒருவன் ப்ரமித்தால் அவன் ப்ரணவத்தில் மூன்றாவது பதமாகிய மகாரத்தை நோக்கவேண்டும். மகாரமானது அறிவுள்ளவனான ஆத்மாவைச் சொல்லுவதாதலால், அறிவில்லாத தேஹம் ஆத்மாவாக இருக்கமுடியாதென்று இதனால் உணரலாகும்.

இனி, தேஹத்திற்காட்டில் வேறுபட்டவன் ஆத்மா என்று அறியப்பெற்றாலும், அந்த ஆத்மா ஸ்வதந்த்ரனே யொழியப் பரதந்த்ரனல்லன்' என்று ப்ரமிக்கவுங் கூடுமாகையாலே அத்தகைய ப்ரமம் உண்டானால் அப்போது முதற்பதமாகிய அகாரத்தை நோக்கவேண்டும். சதுர்த்தீவிபக்தி ஏறிக்கழிந்திருக்கப்பெற்ற அந்த அகாரமானது 'ஜீவாத்மா பரமாத்மாவுக்கு சேஷப்பட்டவன்' என்கிற பொருளை யுணர்த்துதலால் ஜீவாத்மா பரதந்த்ரனேயொழிய ஸ்வதந்த்ரனல்லன் என்று அதனால் உணரலாகும்.

இனி, எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தாலும் அவனுக்குப் போலவே பிறர்க்கும் அடிமைப் பட்டிருக்கலா மாதலாலும், உலகத்தில் ஒருவன் ஒருவனுக்கே அடிமைப் பட்டிருப்பதான நியமம் காணாமையாலும், எம்பெருமானுக்கு அடிமைப் பட்டிருப்பதோடு கூடவே பிறர்க்கும் அடிமைப் பட்டிருக்கலா மென்கிற ப்ரமம் உண்டானால் அப்போது இரண்டாவது பதமாகிய உகாரத்தை நோக்கவேண்டும். உகாரமானது பிரிநிலைப் பொருளதாய் [அதாவது, அவதாரணார்த்தத்தை யுடைத்தாய்] 'எம்பெருமானுக்கே உரியவன்' என்னும் பொருளைக் காட்டுதலால் அந்ய சேஷத்வப்ரமம் அதனால் தொலைந்ததாகும்.

இனி, பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கையின்றிக்கே எம்பெருமானொருவனுக்கே அடிமைப் பட்டிருந்தாலும் தன்னை ரக்ஷித்துக் கொள்ளும் விஷயத்தில் தானே முயற்சி செய்து கொள்ளலாமன்றோ என்று நினைக்குமளவில் நம: என்கிற பதத்தை நோக்கவேணும். தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தனக்கு உரிமையில்லாமையை அந்த நம: பதம் காட்டுகையாலே நம்மை ரக்ஷிக்கும் கடமையும் எம்பெருமானையே சேர்ந்த தென்கிற உறுதி அதனாலுண்டாகும்.

இனி, * கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறருமான ஆபாஸ பந்துக்களிடத்தே பற்று உண்டாகுமளவில் நாராயண பதத்தை நோக்கவேணும், முமுக்ஷுப்படியில் "எம்பிரானெந்தை யென்கையாலே ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும். நாம் பிறக்கானவன்றும் அவன் நமக்காயிருக்கும். இரா மட மூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரும்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்தேயம். நாராயண பதத்திற்கு உள்ளீடான அயநபதத்திற்கு கரணே வ்யுத்பத்தியும் கர்மணி வ்யுத்பத்தியுமாக இரண்டு வ்யுத்பத்திகள் சாஸ்த்ரஸித்தம். "ஈயதே அஸௌ இதி அயநம்" என்கிறவிது கர்மணி வ்யுத்பத்தி. இதனால் எம்பெருமானுடைய உபே

யத்வம் பலித்ததாகும். அந்த உபேயத்வத்துக்கு ஸங்கோசமில்லாமையாலே அது * தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் என்னும்படி மாத்ருத்வம் முதலான ஸர்வப்ரகார விசிஷ்டமாயிருக்கையாலும் பந்து லாபமும் ப்ராப்யமாகையாலும் ஈச்வரன் ஸர்வவித பந்துவென்பது நாராயண பதத்திலே ஸித்தம். ஆனது பற்றியே இந்த நாராயண நாமத்தின் அர்த்தத்தை யநுஸந்திக்கிற திருமங்கையாழ்வாரும் * எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றமெனக்கர சென்னுடைவாணுள் * என்று ஸகலவித பந்துத்வத்தையு மருளிச் செய்தார். ஆகவேஆபாஸ பந்துக்களிடத்தில் பற்று உண்டாகுமளவில் நாராயணபதத்தை நோக்கவேணுமென்றது பொருந்தும்.

இனி, க்ஷுத்ர விஷயங்களிலே ஊற்றமுண்டாகுமளவில் நாராயணபதத்தின் மேலுள்ள சதுர்த்தீவிபக்தியை நோக்கவேணும். அதனுல் நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப் பெறுவேனுக வேணுமென்று அபேக்ஷிக்கிறதாகையாலே விஷயப்ராவண்யத்துக்கு அவகாசம் அறும். ... ... (4)

नेतृत्वं नित्ययोगं समुचितगुणजातं तनुख्यापनं च
उपायं कर्तव्यभागं त्वथ मिथुनपरं प्राप्यमेवं प्रसिद्धम् ।
स्वामित्वं प्रार्थनां च प्रबलतरविरोधिप्रहाणं दशैतान्
मन्तारं त्रायते चेत्यधिगतनिगमष्षट्पदोऽयं द्विखण्डः ॥ ५ ॥

நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசிதகுணஜாதம் தநுக்ய்யாபநம் ச
உபாயம் கர்த்தவ்யபாகம் த்வத மிதுநபரம் ப்ராப்யமேவம் ப்ரஸித்தம்,
ஸ்வாமித்வம் ப்ராா்த்தநாஞ்ச ப்ரபலதரவிரோதிப்ரஹாணம் தசைதாந்
மந்தாரம் த்ராயதே சேத்யதிகதநிகமஷ் ஷட்பதோயம் த்விகண்ட:. (5)

| | |
|---|---|
| நேத்ருத்வம் | புருஷகாரத்வத்தையும் |
| நித்ய யோகம் | ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாத நித்ய ஸம்ச்லேஷத்தையும் |
| ஸமுசித குண ஜாதம் | இன்றியமையாத திருக் குணங்களின் திரளையும் |
| தநுக்ய்யாபநம் ச | திருமேனியைக் காட்டுதலையும் |
| உபாயம் | உபாயத்தையும் |
| கர்த்தவ்ய பாகம் | சேதநன் செய்யவேண்டியதான அத்யவஸாயத்தையும் |
| மிதுநபரம் ப்ராப்யம் | இருவருமான சேர்த்தியை விஷயீகரித்ததான கைங்கர்யத்தையும் |
| ஸ்வாமித்வம் | ஸர்வ சேஷித்வத்தையும் |
| ப்ரார்த்தநாம் ச | கைங்கர்ய ப்ரார்த்தனையையும் |
| ப்ரபல தர விரோதி ப்ரஹாணம் | மிகவும் பிரபலமான உபேய விரோதியைக் கழிப்பதையும் |
| அதிகத நிகம: | வேத ப்ரதீதமாயும் |
| த்வி கண்ட: | இரண்டு கண்டங்களையுடையதாயும் |
| ஷட்பத: | ஆறு பதங்களையுடையதாயுமிருக்கிற |
| அயம் | இந்த த்வயமந்த்ரமானது |
| ஏதாந் தச | ஆகிய இந்த பத்து அர்த்தங்களையும் |
| மந்தாரம் | மனனஞ் செய்கிற உத்தமாதிகாரியை |
| த்ராயதே இதி | காப்பாற்றுகின்றதென்று |
| ஏவம் ப்ரஸித்தம் | இங்ஙனே ப்ரஸித்தமாயிராநின்றது. |

* * * த்வயத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் திருவுள்ளம் பற்றி அர்த்தமருளிச் செய்கிறாரிதில். ஸ்ரீ 1, மத் 2, நாராயண 3, சரணௌ 4, சரணம் 5, ப்ரபத்யே 6, ஸ்ரீமதே 7, நாராயண 8, ஆய 9, நமः 10—என்று இப்பத்து சொற்கள் த்வயத்தி லுள்ளதனால் முறையே ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு அர்த்தமாகப் பத்து அர்த்தங்களை யருளிச்செய்கிறார் இந்த ச்லோகத்தில்.

[நேத்ருத்வம்] இது ஸ்ரீ சப்தார்த்தம். புருஷகாரத்வமென்றபடி. "ணீஞ்— ப்ராபணே" என்கிற தாதுவடியாகப் பிறந்த சொல்லாகையாலே சேதநர்களை எம்பெருமானை ப்ராபித்தவர்களாகச் செய்வித்தலே நேத்ருத்வமாகும். இது புருஷகாரத்வமாகத் தேறி நின்றது. ஸ்ரீ சப்தத்திலிருந்து இது எங்ஙனே கிடைக்கிறதென்னில், ஸ்ரீ சப்தத்திற்கு ஆறு வகையான வ்யுத்பத்திகளுண்டு; ச்ரீயதே; ச்ரயதே, ச்ருணோதி, ச்ராவயதி, ச்ருணாதி, ச்ரீணாதி என்பன. இந்த ஆறு வ்யுத்பத்திகளாலும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் புருஷகாரத்வம் தேறும். ப்ரக்ருதத்தில் முதலிரண்டு வ்யுத்பத்திகளை மாத்திரம் கொண்டாலும் போதும். ஸ்ரீயதே என்கிற கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஆச்ரயிக்கப்படா நின்றாளென்று பொருள் படுகின்றது. எம்பெருமான் எங்களைத் திருவுள்ளம் பற்றும்படி நீர் செய்தருளவேணுமென்கிற வேண்டுகோளுடன் சேதநர்களாலே ஆச்ரயிக்கப்படுபவள் என்றதாயிற்று. இனி, ச்ரயதே யென்கிற கர்த்தரி வ்யுத்பத்தியில் எம்பெருமானை இவள் ஆச்ரயியா நின்றாளென்று பொருள்படுகின்றது. ஸ்வாச்ரிதர்களான சேதநர்களை அங்கீகரிப்பிக்கைக்காக எம்பெருமானிடம் மன்றாடுபவள் என்றதாயிற்று. ஆகவே ஸ்ரீ சப்தத்தினால் புருஷகாரத்வம் சொல்லிற்றாயிற்று.

[நித்யயோகம்] ஸ்ரீ சப்தத்தின்மேல் ஏறிக்கிடக்கின்ற மதுப்பென்கிற ப்ரத்யயத்தின் பொருள் இது. 'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் மதுப்பு வந்திருப்பதாகக் கொள்க. இத்தால், புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டென்பது சொல்லப்பட்டதாயிற்று. அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தையும் சேதநர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமையையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தாலே ஈச்வரனை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாளென்க.

[ஸமுசித குணஜாதம்] இது நாராயணபதத்தின் பொருளை விவரிக்கிறபடி. நாராயணனென்பதற்குப் பல பல பொருள்களுண்டு. ஆங்காங்கு ஸந்தர்ப்பாநுகுணமாகப் பொருள் கொள்ளவேண்டியதாகும். இங்கு, வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஜ்ஞானம் சக்தி ஆகிற இத் திருக்குணங்களையுடையவன் என்கிற பொருள் கொள்ளக் கடவது. ஏனெனில், ஆச்ரியிக்க ருசியுடைய சேதநன் அநாதிகாலமாகப் பண்ணின அபராதங்களைப் பார்த்துச் சீற்றங்கொண்டு இவனை அங்கீகரிக்கமாட்டே னென்றிருக்கு மெம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது, உபதேசத்தாலும் அழகாலும் வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல புருஷகார பலத்தாலே தலைமடிந்தொழிந்த பிறகு, ஏற்கெனவே அந்த ஸ்வாதந்திரியத்தின்

கீழ் அமுங்கிக் கிடந்து இப்போது தலையெடுக்குமவையான குணங்கள் இவை யாதலால் இக்குணங்கள் இங்கு நாராயண பதத்திற்கு அர்த்தமாகக் கொள்ளப்பட வேணும்.

இக்குணங்களுக்கு இவ்விடத்தில் உபயோகம் என்னவெனில், ஆச்ரயிக்க வந்த சேதநன் தன் தோஷங்களை நோக்கி அஞ்சாமைக்கு உறுப்பு வாத்ஸல்யம். நமது காரியம் செய்வனோ மாட்டானோ வென்று தளும்பாமல் அவசியம் செய்வ னென்று தேறியிருப்பதற்குறுப்பு ஸ்வாமித்வம். உபய விபூதிக்கும் கடவனுயிருக்கும் பெருமைக்கு ப்ரகாசகமான ஸ்வாமித்வத்தைக் கண்டு சேதநன் தனது தாழ்வை யநுஸந்தித்து அகலாமைக்குறுப்பு ஸௌசீல்யம். அதீந்த்ரியன் [அதாவது, கண் ணுக்கு இலக்காகாதவன்] என்று பிற்காலியாமல் கண்ணாலே கண்டு ஆச்ரயிக் கைக்கு உறுப்பு ஸௌலப்யம். ப்ராப்தி விரோதிகளைப் போக்கி ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு ஜ்ஞாநசக்திகள். ஆக இப்படிப்பட்ட திருக்குணங்கள் நாராயண சப்தார்த்தமாக இங்கு அநுஸந்தேயமென்றதாயிற்று.

[தநுக்க்யாபநம்] 'நாராயணனுடைய திருவடிகளைப் பற்றுகிறேன்' என்று மூலத்தில் இருந்தாலும் திருவடிகளைச் சொன்னவிது திருமேனிக்கு உபலக்ஷண மென்று கொள்ளக் கடவது. விக்ரஹத்தில் ஏகதேசமான திருவடிகளைச் சொன்ன போதே புருஷகார பூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய் நாராயண பதத்திற் சொன்ன குணங்களுக்கு ப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹம் தெரிவிக்கப்பட்ட தாகுமன்றோ.

[உபாயம்] த்வயத்தில் முதற்பதமான 'ஸ்ரீமந்நாராயண சரணௌ' என்ற வளவுக்கு இதுவரையில் அர்த்தம் சொல்லியாயிற்று. இனி இரண்டாவது பதமான ஶரணமென்பதற்கு அர்த்தம் சொல்லுகிறது. இஷ்டத்தைப் பெறுகைக்கும் அநிஷ் டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத வுபாயமாக—என்பது ஶரண சப்தார்த்தமென்று காட்டினாராயிற்று.

[கர்த்தவ்யபாகம்] இது ப்ரபத்யே என்கிற க்ரியாபதத்தை நோக்கியருளிச் செய்கிறபடி. 'ப்ரபத்யே' என்பதற்குப் பற்றுகிறேனென்று பொருள். ரக்ஷித்தருள வேணுமென்று வாயினால் பிரார்த்திக்கையாகிற கேவலவாசிகமாகவும், கைகூப்புதல் நமஸ்கரித்தல் முதலியவையாகிற கேவலகாயிகமாகவும் பற்றினாலும் பலன் ஸித்திக் கக் குறையில்லை. ஆனாலும் 'தத்வ ஜ்ஞாநாத் மூக்தி:' என்று ஞானத்தாலே மோக்ஷ மென்கையாலே இங்கு மாநஸமான பற்றுதலே சொல்லிற்றாகக் கடவதென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை இசைகை யாகிற ஒரு அத்யவஸாயமே இந்த ஞானம். இதுவே கர்த்தவ்யமென்று காட்டின படி. வாசிக காயிக மாநஸிகங்களாகிற மூன்றில் இதுவொரு பாகமாகையாலே 'கர்த்தவ்ய பாகம்' என்றது.

ஆக இவ்வளவும் பூர்வகண்டத்தின் பொருள் பணிக்கப்பட்டதாயிற்று. இனி உத்தர கண்டத்தின் பொருள் பணிக்கத் தொடங்குகிறபடியை (அத) என் றிட்டுக் காட்டுகிறார்.

[மிதுநபரம் ப்ராப்யம்] பெருமாளும் பிராட்டியுமாக இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கையைப்ரார்த்திப்பதே உத்தரவாக்யத்தின் திரண்ட பொருள். பூர்வவாக்யத்தை விவரிக்கும்போது ஸ்ரீசப்தத்திற்குக் காட்டின இரண்டு வ்யுத்பத்திகளும் அர்த்தமும், மதுப்புக்கு அர்த்தமான நித்யயோகமும் அப்படியே அநுஸந்திக்கத் தக்கது. ஆகவே, ஸ்ரீமதே என்பதற்கு—பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்குமவனுக்கு என்று பொருளாம். பிராட்டியின் நித்ய யோகத்தை யநுஸந்தித்ததானது இரண்டிடத்திலும் ஒரே விதமாக இருந்தாலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி இவளிருக்கு மிருப்பை நிஷ்கர்ஷித்துக் கொள்ளவேணும். பூர்வவாக்யத்தில் அநுஸந்தித்த நித்யயோகம் புருஷகாரத்வத்திற்காக. இப்போது உத்தரவாக்யத்தில் அநுஸந்திக்கிற நித்தியயோகம்—கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வேந அந்வயம் எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கு முண்டென்கைக்காக. ஆகவே கைங்கர்யத்திற்கு உத்யேச்யம் மிதுனமேயென்றதாயிற்று.

[ஸ்வாமித்வம்] இது நாராயண பதார்த்தம். நாராயணத்வமாவது உபய விபூதி நாதத்வமாகையாலே ஸர்வஸ்வாமியாயுள்ளவனுக்கு என்றதாகும். கைங்கர்ய ப்ரகரணமாகையாலே இப்பொருள்தான் பொருந்தும். ப்ராப்தனை ஸ்வாமியேயன்றோ கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாவான். அப்ராப்த விஷயத்தில் பண்ணும் கைங்கரியம் ரஸிக்கமாட்டாதே.

[ப்ரார்த்தநாம்] நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தீவிபக்தியின் அர்த்தமிது. ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸகலவித கைங்கர்யங்களையும் பண்ணக்கடவேனென்கிற பிரார்த்தனையைக் காட்டுவதாம் சதுர்த்தி. சேஷத்வஜ்ஞாந கார்யமான உபாய பரிக்ரஹத்துக்கு அடுத்தபடியாக ப்ராப்தமான இந்த சதுர்த்தியானது, பரிக்ரஹித்த உபாயத்தினுடைய பலனை கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கிறபடியைத் தெரிவிக்கிறதென்கையே உசிதம்.

[ப்ரபலதரவிரோதி ப்ரஹாணம்] நம: பதத்தின் பொருள் கூறுகிறபடியிது. நமச்சப்தமானது பொதுவாக அஹங்கார மமகாரங்களைக் கழிக்குமதாகையாலே திருமந்த்ரத்தில் நடுவிலுள்ள நமஸ்ஸு போலே ஸ்வரூப விரோதி உபாய விரோதி புருஷார்த்த விரோதி ஆக மூன்றையும் கழிக்க வல்லதாயிருந்ததேயாகிலும் இங்கு அப்படியல்லாமல், கைங்கர்ய ப்ரார்த்தனைக்கு அடுத்துள்ளதாகையாலே இந்த கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது. கைங்கர்யத்தைத் தன்னுடைய ரஸத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகையே இங்கு விரோதியாகும். அங்ஙனே நினைத்துப் பண்ணலாகாது. 'பகவந் முக விகாஸ ஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம்' என்கிற ப்ரதிபத்தியே நடக்கக்கடவது. இதில், தான் போக்தா என்கிற ப்ரதிபத்தியும் தன்னுடையது போகம் என்கிற பிரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாகும். அந்த ப்ரதிபத்தியே [எண்ணமே] ப்ரபலதரவிரோதியென்கிறது. அதனுடைய ப்ரஹாணமாவது கழிவு. அதுவே நமஸ்ஸின் பொருள் என்றதாயிற்று. ஆக இப் பத்து அர்த்தங்கள் த்வயத்திலே அநுஸந்தேயமென்று காட்டியருளினாராயிற்று.

தசைதாந் என்கிற ஸ்தானத்திலே தசார்த்தாந் என்பது சிலருடைய பாடம். ஆக இந்த அர்த்தங்களை [மந்தாரம் த்ராயதே] மனனம் பண்ணுகிற பக்த வர்க்கத்தை சப்த சக்தியாலும் அர்த்த சக்தியாலும் காக்கின்றது இந்த மந்த்ரரத்நம். 'அதிகதநிகமஃ' என்பதே முன்னோர்கள் ஆதரித்த பாடம். கடவல்லியாகிற நிகமத்தில் [வேதபாகத்தில்] ஓதப்பட்டுள்ளது இந்த மந்த்ர மென்றபடி. 'அதிகதநியமஃ' என்பது சிலருடைய பாடம்.

[ஷட்பதஃ] இதில் முதல் பதத்தை ஸ்ரீமந், நாராயண, சரணௌ என மூன்று பதமாகப் பிரித்தும், ஸ்ரீமந்நாராயண, சரணௌ என இரண்டு பதமாகப் பிரித்தும், சிலர் வியாக்கியானிப்பது அஸம்பிரதாயமென்று காட்டுதற்காக 'ஷட்பத:' என்று பதஸங்க்யையைக் காட்டிஞராயிற்று. .... .... ... (5)

ईशानां जगतामधीशदयितां नित्यानपायां श्रियं
संश्रित्याश्रयणोचिताखिलगुणस्यांघ्री हरेराश्रये ।
इष्टोपायतया श्रिया च सहितायात्मेश्वरायार्थये
कर्तुं दास्यमशेषमप्रतिहतं नित्यं त्वहं निर्ममः ॥ ६ ॥

ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம்
ஸம்ச்ரித்யாச்ரயணோசிதாகில குணேஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே,
இஷ்டோபாயதயா ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மமஃ (6)

| | | | |
|---|---|---|---|
| ஜகதாம் ஈசாநாம் | உலகங்களுக்குத் தலைவியாய் | ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வராய | பெரிய பிராட்டியாரோடு கூடி யிருந்துள்ள ஸர்வ சேஷியான நாராயணனுக்கு |
| அதீச தயிநாம் | ஸர்வேச்வரனுக்கு ப்ராண வல்லபையாய் | | |
| நித்யாநபாயாம் | ஒரு போதும் விட்டுப்பிரியாதவளாயிருக்கின்ற | நிர்மம: அஹம் | கைங்கரியத்தில் களையான மமகாரம் சிறிதுமில்லாத அடியேன் |
| ச்ரியம் | பெரிய பிராட்டியாரை | | |
| ஸம்ச்ரித்ய | புருஷகாரமாகப் பற்றி | அசேஷம் தாஸ்யம் | ஸகல வித கைங்கர்யத்தையும் |
| ஆச்ரயணோசித அகில குணஸ்ய | சரணவரணத்திற்குப் பாங்கான ஸகல குணங்களையுமுடைய | அப்ரதிஹதம் | இடையூறின்றி |
| ஹரே: | எம்பெருமானுடைய | நித்யம் | இடைவீடின்றி |
| அங்க்ரீ | திருவடிகளை | கர்த்தும் | செய்யும் பொருட்டு |
| இஷ்ட உபாய தயா ஆச்ரயே | இஷ்ட ஸாதநமாகப் பற்றுகின்றேன். (ஆக பூர்வ கண்டார்த்தத்தை அநுஸந்தித்தபடி.) | அர்த்தயே | ப்ரார்த்திக்கிறேன் (இது உத்தர கண்டார்த்தத்தை அநுஸந்தித்தபடி.) |

இந்த ச்லோகமும் த்வயத்தின் விவரணமாகவே அமைந்தது. கீழ்ச்லோகம் பதார்த்த விவரணத்தில் நோக்காகச் சென்றது. இந்த ச்லோகம் வாக்யார்த்த ப்ரதிபாதகமாய்ச் செல்லாநின்றது. இரண்டு கண்டங்களாக இருக்கின்ற இந்த

த்வயத்தில் பூர்வ கண்டத்தினுல்—பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப்பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. உத்தரகண்டத்தாலே—பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கரியம் பண்ண வேணு மென்கிற பிரார்த்தனை காட்டப்படுகிறது—என்று தொகுத்துத் தாத்பர்யமருளிச் செய்தாராயிற்று.

பெரிய பிராட்டியார்க்கு இதில் மூன்று விசேஷணங்களிடுகிருர்; இவற்றுக்குத் திருவுள்ளமேதென்னில்; கேண்மின். பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரமாக முதலிரண்டு விசேஷணங்கள் அமைந்தன. இவள் சேதநர்களனைவர்க்கும் மாதாவாய் அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தம் கண்டு பொறுத்திருக்கமாட்டாதே யிருக்கிறவொரு தன்மையும். எம்பெருமானுக்குப் பத்தினியாய் *பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு* என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன்சொற்படி நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கிறவொரு தன்மையும் உடையளாகையாலே ஒருவகையாலும் பழுதாகமாட்டாத புருஷகாரம். உலகில் புருஷகாரம் செய்பவர் களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்ய வேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டிய தொன்று. யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றி பெற்றே தீரும்படியான வால்லப்ய மிருக்கவேண்டியது மற்ருென்று; இவ்விரண்டும் பிராட்டி பக்கலிலே புஷ்கலமென்பது இவ்விரண்டு விசேஷணங்களினுலும் நிருபிக் கப்பட்டதாயிற்று.

**நித்யாநபாயாம்** என்கிற மூன்ருவது விசேஷணத்தினுல், எம்பெருமானை ஆச்ர யிப்பதற்கு ருசியொன்றே வேண்டுவது, காலம் பார்க்க வேண்டாவென்பது காட்டப் படுகிறது. பிராட்டி எப்போதும் எம்பெருமானேடு கூடியேயிருக்கின்ருளென்று தெரிந்து கொள்ளுமளவில், ''புருஷகாரம் செய்பவள் அருகேயிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்'' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை'' என்பதும் தெரிந்துகொண்டதாகுமன்ருே.

**ச்ரியம் ஸம்ச்ரித்ய** என்கையாலே பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றியே எம் பெருமானை உபாயமாகப் பற்ற வேணுமென்கிற நியதி காட்டப்படுகிறது. எம்பெரு மானுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்து கொண்டு அவனை ஆச்ரயிக்கிற இந்த சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? எனில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே ஸர்வபூத ஸுஹ்ருத்தானவன் திருவுள்ளத் திலே, சேதநன் அளவுகடந்து பண்ணின அபராதமடியாகச் சீற்றம் பிறப்பது முண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப் பிராட் டிக்காக. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தையாற்றி தயையை யுண்டாக்குபவள் இவள். ஆகவே ஸம்பந்தஜ்ஞான முள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை அவசியமேயாம்.

[ஆச்ரயணேசிதாகில குணஸ்ய] எம்பெருமானுடைய திருக்குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களென்றும் ஆச்ரித கார்யாபாதகங்களென்றும் இரண்டு வகுப்பாக வுள்ளன. நம்போல்வார் சென்று கூசாமல் ஆச்ரயிப்பதற்குப் பாங்கான வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்ய குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களாம். ஆச்ரயித்தவர்களின் அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைத் தலைக்கட்டுகைக்கீடான ஜ்ஞாநம் சச்தி பூர்த்தி யென்கிற குணங்கள் ஆச்ரித கார்யாபாதகங்களாம். இவற்றைத் திருவுள்ளம்பற்றி "ஆச்ரயணேசிதாகிலகுணஸ்ய" என்றது.

இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தில் பூர்வகண்டார்த்த ப்ரதிபாதநத்தில் "ச்ரியம் ஸம்ச்ரித்ய ஹரே: அங்க்ரீ ஆச்ரயே" என்றருளிச்செய்து, மேல் உத்தரார்த்தத்தில் உத்தர கண்டார்த்த ப்ரதிபாதநத்தில் "ச்ரியா ச ஸஹிதாய தாஸ்யம் கர்த்தும் அர்த்தயே" என்றருளிச் செய்திருக்கையாலே நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்ற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் குறிக்கொள்ளத் தக்கது. அதாவது, பூர்வவாக்யத்தில் ஸ்ரீ ஸம்பந்தம் அநுஸந்தித்தது புருஷகாரத்வேந மாத்திரமென்றும், உத்தரவரக்கியத்தில் அது அநுஸந்தித்தது கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தித்வம் எம்பெருமானேடொக்க இவளுக்கு முண்டென்றும் காட்டினதேயாம்.

இந்தச்லோகத்தில் ஆச்ரயே, அர்த்தயே என்கிற உத்தம புருஷக்ரியாபதங்களை ப்ரயோகித்திருக்கையாலே த்வயத்தின் அர்த்தத்தை பட்டர் தாம் வியாக்கியானிக்கிறவளவேயன்றிக்கே தம்முடைய அநுஷ்டாந சேஷமாகவும் கொண்டருளினரென்கிற விசேஷம் உணரத்தக்கது. .... .... .... (6)

मत्प्राप्त्यर्थतया मयोक्तमखिलं संत्यज्य धर्मं पुनः
मामेकं मदवाप्तये शरणमित्यार्तोऽवसायं कुरु ।
त्वामेवं व्यवसाययुक्तमखिलज्ञानादिपूर्णो ह्यहं
मत्प्राप्तिप्रतिबन्धकैर्विरहितं कुर्यां शुचं माकृथाः ॥ ७ ॥

மத்ப்ராப்த்யர்த்ததயா மயோக்தமகிலம் ஸம்த்யஜ்ய தர்மம் புந:
மாமேகம் மதவாப்தயே சரணமித்யார்த்தோவஸாயம் குரு,
த்வாமேவம் வ்யவஸாயயுக்தமகிலஜ்ஞாநாதிபூர்ணோ ஹ்யஹம்
மத்ப்ராப்திப்ரதிபந்தகைர் விரஹிதம் குர்யாம் சுசம் மாக்ருதா:. (7)

| | |
|---|---|
| மத்ப்ராப்தி அர்த்ததயா | என்னைப் பெறுகைக்கு உபாயமாக |
| மயா உக்தம் | (உனது மனத்தை சோதிப்பதற்காக) என்னாலே சொல்லப்பட்ட |
| அகிலம் தர்மம் ஸம்த்யஜ்ய | ஸகல தர்மங்களையும் விட்டு |
| மாம் ஏகம் புந: | என்னொருவனையே குறித்து |
| ஆர்த்த: | ஆர்த்தி மிகுந்தவனாய் |
| மதவாப்தயே சரணம் இதி அவஸாயம் | என்னைப் பெறுகைக்கு நானே உபாயமென்கிற அத்யவஸாயத்தை |
| குரு | செய்வாயாக; |
| ஏவம் வ்யவஸாய யுக்தம் த்வாம் | இத்தகைய அத்யவஸாயத்தோடு கூடிய என்னை |
| ஜ்ஞாநநிபூர்ண: அஹம் | ஞானம் முதலிய குணங்கள் நிறைந்த நான் |
| மத்ப்ராப்திப்ரதிபந்தகை: விரஹிதம் குர்யாம் | என்னைப் பெறுகைக்கு இடையூருயுள்ள பாபங்கள் அற்றவனாகச் செய்யக் கடவேன்; |
| சுசம் மா க்ருதா: | துக்கங் கொள்ளாதே. |

இந்தச்லோகத்தாலும் மேல்ச்லோகத்தாலும் சரமச்லோக ரஹஸ்யத்தின் பொருளை வியாக்கியானித்தருளுகிருர். கீழே விவரித்த த்வயத்தில் பூர்வவாக்யத்தால் உபாய வரணமன்ரோ சொல்லப்படுகிறது. அதனை ஸர்வேச்வரன் தானே விதிக்கிருனுதலால் அது அவனுக்கு அபிமதமாயிருக்கு மென்னுமிடம் கீதையில் ஸாரமான * ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ * என்கிற ச்லோகத்தால் நன்கு விளங்குவதால் இந்த ச்லோகத்தை நம் முன்னோர்கள் மூன்ருவது ரஹஸ்யமாக அநுஸந்திக்க நியமித்தருளினுர்கள். மேற்குறித்த கீதா ச்லோகத்தில் ஶரணவரணம் ஸர்வேச்வரனுலேயே விதிக்கப்படுகிறதென்பது மாத்திரமேயல்ல; வரணத்திற்கு அங்கமான உபாயாந்தர பரித்யாகமும், வரணத்தில் உபாயத்வ புத்தியைத் தவிர்த்தலும், ப்ராப்திப்ரதிபந்தக ஸகல பாப விமோசனமுமாகிய இவையும் பிரதிபாதிக்கப்படுகையால் இந்த ச்லோகம் த்வயத்திற்கு விவரணமாயுமுள்ளது. பஞ்சம வேத ஸாரமான கீதோபநிஷத்தின் தாத்பர்ய ஸாரமாயுமுள்ளது. இந்த ச்லோகத்தின் அர்த்தம் கேட்கைக்காகவே எம்பெருமானுர் பதினெட்டு விசை திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளினதாக ஸம்பிரதாயம். நம்பி தாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகள் இல்லாமையையும் பார்த்து எம்பெருமானுருடைய ஆஸ்திக்யத்தையும் ஆதரத்தையும் பரீக்ஷிக்கைக்காகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி மாஸோபவாஸங் கொண்டு பிரதிஜ்ஞையும் பெற்றுக்கொண்டு அருமைப்படுத்தி யருளிச்செய்ததாகவும் ப்ரஸித்தம்.

இதற்கு சரமச்லோகமென்று எதனுல் திருநாமமாயிற்றென்னில், சரமமான உபாயத்தை வெளியிடுகின்ற ச்லோகம் சரமச்லோகம் என்று விவக்ஷிதம். இந்த ச்லோகத்துக்குக் கீழே பல அத்யாயங்களிலே கருமயோகம் ஞானயோகம் முதலிய சில உபாய விசேஷங்களை மோக்ஷ ஸாதனமாக விரிவாய் உபதேசித்தருளினுன் கண்ணபிரான். அதைக்கேட்ட அர்ஜுநன் அவை அநுஷ்டிக்க எளியனவல்லவென்றும் பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வப்ரயத்ந ரூபங்களான இவை விரோதிகளென்றும் நினைத்து 'இவற்ருலே எம்பெருமானைப் பெறுவதென்று ஒன்றுண்டோ? இனி இழந்தே போமித்தனை' என்று சோகித்து நின்ருன். அன்னவனைக்குறித்து அவனுடைய அந்த சோகம் போகைக்காக, அநுஷ்டிக்க வெளிதாய் ஸ்வரூபாநு ரூபமான இந்த சரமோபாயம் அருளிச்செய்யப்பட்டதாகையாலே சரமோபாய ப்ரதிபாதகமான ச்லோகம் சரமச்லோகமென்று கொண்டு வழங்கலாயிற்று.

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றதன் பொருளை "மத்ப்ராப்த்யர்த்ததயா" என்று தொடங்கி ஒரு பாதத்தாலே அருளிச் செய்கிருர். 'எல்லா தர்மங்களையும் விட்டு' என்பது முதல் பாதத்தின் பொருள். ஒரு பலனுக்கு ஸாதனமாயிருக்குமது எதுவோ அதுவே தருமமெனப்படுவது. மோக்ஷோபாயங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே இவ்விடத்திலுள்ள தர்ம சப்தமானது—ஐஹிகமாயும் ஸ்வர்க்காதி ஆமுஷ்மிகமாயுமிருந்துள்ள த்ருஷ்ட பலன்களுக்கு ஸாதனங்களானவற்றைச் சொல்லுகையன்றியே பகவத் ப்ராப்தி ரூபமான மோக்ஷ பலத்திற்கு

ஸாதனமாயுள்ளவற்றைச் சொல்லுகிறது. அந்த மோக்ஷ பல ஸாதனங்களை ச்ருதி ஸ்ம்ருதி முகத்தாலே விதித்தருளினவன் தானேயாகையாலே "மயா உக்தம்" எனப்பட்டது. கர்மஜ்ஞாநபக்தி யோகங்களென்ன, அவதார ரஹஸ்யஜ்ஞானம் புருஷோத்தம வித்யை தேசவாஸம் திருநாமஸங்கீர்த்தனம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முதலான—உபாயபுத்தியோடு செய்யுமவையென்ன, அந்தந்த ஸாதன விசேஷங்களை யநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்யகர்மங்களென்ன—ஆக ச்ருதிஸ்ம்ருதி சோதிதங்களாய் நித்ய நைமித்திகாதி ரூபங்களான கர்மயோகாதி உபாயங்களை யென்றபடி.

[ஸம்த்யஜ்ய] கீழ்ச் சொல்லப்பட்ட உபாயங்களின்படியை நன்கு நோக்கி, வெள்ளியல்லாததொரு சிப்பியிலே வெள்ளியென்கிற புத்தியைப் பண்ணுவாரைப் போலேயும், ஒரு திக்கிலே போகவிரும்பி வேறொரு திக்கை அதுவாக நினைத்துப் போவாரைப் போலேயும் பகவத் ப்ராப்திக்கு உபாயத்தை விரும்புகின்ற நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயபுத்தி பண்ணினோமே! என்கிற அநுதாப புத்தி விசேஷத்தோடே விட்டு என்றபடி. உபாயாந்தரங்களை விட்டே பற்றவேணு மென்கிற நிர்ப்பந்தம் ல்யப்பாலே தோற்றுவிக்கப்படுகிறது. இப்படி விட்டே பற்ற வேணுமென்கிற நியமம் என்னென்னில்; உபாயாந்தரங்களான இவற்றிலே சிறிது அந்வயம் கிடந்தாலும் இவை பேற்றுக்கு ஸாதனமாகாத மாத்திரமன்றிக்கே பேற்றுக்குப் பிரதிபந்தகமாயும் நிற்கும். இதற்கொரு நிதர்சனம் காணலாம். இராவணன் ராமசரங்களாலே மிகவும் நொந்து நிலைகலங்கி எதிரம்பு கோக்க முடியாமே நின்றான். அப்போதும் ராமபாணங்கள் மேன்மேலும் விழுந்துகொண் டிருந்தன. தருமயுத்தஞ் செய்யுமிராமன், நாம் அம்புவிடாமலிருக்கவும் தான் அம்புகளை விடுவதற்கு என்ன காரணமென்று இராவணன் சிந்தித்தான். தன் கையில் வில்லிருப்பதுதான் காரணமென்று தெரிந்துகொண்டு பிறகு அந்த வில்லை யும் பொகட்டான். அப்போது பெருமாள் சரமாரி பொழிவதை நிறுத்தி * கச்சாநு ஜாநாமியென்று அவனுக்கு விடைகொடுத்தனுப்பினதாக ஸ்ரீராமாயணத்திலுள்ளது. இராவணன் பொகட்ட அந்த வில் அவனது கையிலிருந்தபோது எதிரியை வெல்வ தற்கு ஸாதனமாகாமலிருந்தவளவேயன்றிக்கே தன்னைப் பெருமாள் வாட்டுவதற்கும் ஹேதுவாயிருந்தது. * கச்சாநுஜாநாமி * [இராவணா! புறப்பட்டுப்போ, விடைதரு கிறேன்] என்கிற திருவாக்கு அப்போது அவதரிக்காமல் வில்லைப் பொகட்டபின்பே அவதரித்தமையால் அந்த வில்லே இராவணனுக்குக் கால் கட்டாயிருந்து ஆபத் துக்கு ஆஸ்பதமாயிருந்ததென்று தெளிவாயிற்று. அதுபோலவேயாம் உபாயாந் தரங்களும். உபாயாந்தரப்பற்று உள்ளவரையில் பகவதநுக்ரஹம் அவகாசம் பெறு தென்றவாறு.

[மாம் ஏகம் மதவாப்தயே சரணமிதி] ஸர்வரக்ஷகனாய் உனக்குக் கையாளா யிருக்கிற என்னையே, என்னைப் பெறுகைக்கு உபாயமாகக் கொள்ளென்கிறது. தேச விப்ரகர்ஷத்தாலே காணவும் கிட்டவுமொண்ணாதபடியிருக்கிற பரவ்யூஹங் களையும், அஸாதாரண விக்ரஹயுக்தமல்லாமல் உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேச்ய மாயிருக்கிற அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது மாம் என்கிறவிது. அவதரித்துக் கண்ணுக்கிலக்காய் அணுகிநிற்கிற விபவரூபனை

தன்னையன்றே மாமென்று சுட்டிக்காட்டுகிறது. ஏகசப்தம் ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணப் பொருளைக் காட்டுகிறது. இந்த அவதாரணத்தால் வ்ரஜ என்று மேலே சொல்லுகிற சரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது. ப்ரபத்தியின் அநுபாயத்வம் ஸ்தாபிக்கப்படுகிற தென்றபடி. அந்வயவ்யதிரேகங்களாலே உபாயமென்று திண்ணமாகத் தோற்றுகிற ஶரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கலாமோவென்னில், ஶரணவரணமான பிறகு இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் அவனாலே யானாப்போலே அதற்கு முன்னம் நேருகின்ற ஶரணவரணந்தானும் அவனாலேயுண்டாமது என்பதே பரமார்த்தம். ஆகவே ஶரணவரணம் உபாயபூதனான ஸர்வேச்வரனுடைய கார்யமேயொழிய உபாயமன்றென்க.

[ஆர்த்தஃ] இது எந்த பதத்தினுடைய அர்த்தமென்னில்; வ்ரஜ என்கிற க்ரியையினாலே ஆக்ஷிப்தமாக த்வம் என்கிற கர்த்தா கிடைத்துத்தீர வேணுமே; அதன் விசேஷார்த்தமிது. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தங்களென்றும் துஷ்கரங்களென்றும் நினைத்து மிகவும் அவஸந்நனாயிருக்கிற நீ என்றபடி. "மாம் ஏகம்—அவஸாயம் குரு' என்கிறவிவை வடமொழி மரியாதையின்படி நேரே அந்வயிக்க மாட்டாவாகையாலே, மாமேகம் ப்ரதி, அல்லது மாமேக முத்திச்ய அவஸாயம் குரு என்று கொள்வது. அவஸாயமாவது அத்யவஸாயம். வ்ரஜ என்பதற்கு புத்திபண்ணு என்று [illegible] 'வ்ரஜ கதௌ' என்று தாது பாடமாகையாலே வ்ரஜதாதுவுக்கு கதி அர்த்தமாகி 'கத்யர்த்தா: புத்த்யர்த்தா:' என்கிற நியாயத்தாலே அத்யவஸாயம் செய் என்றபடி. **மாமேகம் சரணம் வ்ரஜ**—என்னையே உபாயமாக நெஞ்சிற் கொள்க என்றதாயிற்று. *சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையினாலும்* என்கிறபடியே மநோவாக்காயங்கள் மூன்றினாலுமுண்டான ஸ்வீகாரம் அதிகார பூர்த்திக்கு உடலாகையாலே வாசிகமும் காயிகமும் இந்த ஸ்வீகாரத்திற்கு வேண்டியிருக்கச் செய்தேயும் *ஜ்ஞாநாத் மோக்ஷ மென்கையாலே அவையிரண்டையுமொழிய மாநஸமான அநுஷ்டான மாத்ரத்தைச் சொல்லுகிறது.

இனி உத்தரார்த்தத்தினாலே சரமச்லோகத்திலுத்தரார்த்தத்தின் கருத்தை யருளிச்செய்கிறார். [**அகில ஜ்ஞாநாதி பூர்ணோ ஹ்யஹம்**] ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனான நான் என்றபடி. அல்லாத குணங்களெல்லாங் கிடக்க இந்த குண விசேஷங்களை இந்த அஹம் சப்தம் காட்டுகிற தென்பானேன் என்னில்; இந்த சேதநனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுமளவில் இவன் இதற்கு முன்னே நின்ற நிலையையும் மேல் போகத்தக்க வழியையும் அறிவதற்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் வேண்டியவை ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்கள். காரியம் செய்யுமிடத்தில் இவனுக்காகவன்றிக்கே தன் பேறாகச் செய்து தலைக்கட்டுகைக் கீடானது ப்ராப்த சேஷித்வம். ஆகவே இம்மூன்று குணவிசேஷங்களுக்கே இங்கு ஔசித்யமுண்டென்று உணர்க. "ஜ்ஞாநாதி" என்றவிடத்தில் ஆதிசப்தத்தாலே ஶக்தியையும் ப்ராப்தியையும் கொள்க.

[**ஏவம் வ்யவஸாயயுக்தம் த்வாம்**] உன் காரியங்களை யறிகைக்குத் தக்க ஞானமில்லாதவனாய், அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக் கொள்ளுகைக்கு சக்தியில்லாத

தன்னையன்றே மாமென்று சுட்டிக்காட்டுகிறது. ஏகசப்தம் ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணப் பொருளைக் காட்டுகிறது. இந்த அவதாரணத்தால் வ்ரஜ என்று மேலே சொல்லுகிற சரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது. ப்ரபத்தியின் அநுபாயத்வம் ஸ்தாபிக்கப்படுகிற தென்றபடி. அந்வயவ்யதிரேகங்களாலே உபாயமென்று திண்ணமாகத் தோற்றுகிற ஶரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கலாமோவென்னில், ஶரணவரணமான பிறகு இவனுக்கு அநிஷ்டநிவ்ருததியும் இஷ்டப்ராப்தியும் அவனாலே யானாப்போலே அதற்கு முன்னம் நேருகின்ற ஶரண வரணந்தானும் அவனாலேயுண்டாமது என்பதே பரமார்த்தம். ஆகவே ஶரண வரணம் உபாயபூதனான ஸர்வேச்வரனுடைய கார்யமேயொழிய உபாயமன்றென்க.

[ஆர்த்தஃ] இது எந்த பதத்தினுடைய அர்த்தமென்னில்; வ்ரஜ என்கிற க்ரியையினாலே ஆக்ஷிப்தமாக த்வம் என்கிற கர்த்தா கிடைத்துத்தீர வேணுமே; அதன் விசேஷார்த்தமிது. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தங்களென்றும் துஷ்கரங்களென்றும் நினைத்து மிகவும் அவஸந்நனாயிருக்கிற நீ என்றபடி. "மாம் ஏகம்—அவஸாயம் குரு' என்கிறவிவை வடமொழி மரியாதையின்படி நேரே அந்வயிக்க மாட்டாவாகையாலே, **மாமேகம்** ப்ரதி, அல்லது **மாமேக** முத்திச்ய அவஸா**யம்** குரு என்று கொள்வது. அவஸாயமாவது அத்யவஸாயம். வ்ரஜ என்பதற்கு புத்திபண்ணு என்று அர்த்தம். 'வ்ரஜ கதௌ' என்று தாது பாடமாகையாலே வ்ரஜதாதுவுக்கு கதி அர்த்தமாகி 'கத்யர்த்தா: புத்த்யர்த்தா:' என்கிற நியாயத் தாலே அத்யவஸாயம் செய் என்றபடி. **மாமேகம் சரணம்** வ்ரஜ—என்னையே உபாய மாக நெஞ்சிற் கொள்க என்றதாயிற்று. *சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையி னாலும்* என்கிறபடியே மநோவாக்காயங்கள் மூன்றினாலுமுண்டான ஸ்வீகாரம் அதிகார பூர்த்திக்கு உடலாகையாலே வாசிகமும் காயிகமும் இந்த ஸ்வீகாரத்திற்கு வேண்டியிருக்கச் செய்தேயும் *ஜ்ஞாநாத் மோக்ஷ மென்கையாலே அவையிரண் டையுமொழிய மாநஸமான அநுஷ்டான மாத்ரத்தைச் சொல்லுகிறது.

இனி உத்தரார்த்தத்தினாலே சரமச்லோகத்திலுத்தரார்த்தத்தின் கருத்தை யருளிச்செய்கிறார். [**அகில ஜ்ஞாநாதி பூர்ணோ ஹ்யஹம்**] ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தி யாய் ப்ராப்தனான நான் என்றபடி. அல்லாத குணங்களெல்லாங் கிடக்க இந்த குண விசேஷங்களை இந்த அஹம் சப்தம் காட்டுகிற தென்பானேன் என்னில்; இந்த சேதநனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணு மளவில் இவன் இதற்கு முன்னே நின்ற நிலையையும் மேல் போகத்தக்க வழியை யும் அறிவதற்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் வேண்டியவை ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்கள். காரியம் செய்யுமிடத்தில் இவனுக்காக வன்றிக்கே தன் பேறாகச் செய்து தலைக்கட்டுகைக் கீடானது ப்ராப்த சேஷித்வம். ஆகவே இம்மூன்று குணவிசேஷங்களுக்கே இங்கு ஔசித்யமுண்டென்று உணர்க. "ஜ்ஞாநாதி" என்றவிடத்தில் ஆதிசப்தத்தாலே ஶக்தியையும் ப்ராப்தியையும் கொள்க.

[**ஏவம் வ்யவஸாயயுக்தம் த்வாம்**] உன் காரியங்களை யறிகைக்குத் தக்க ஞான மில்லாதவனாய், அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக் கொள்ளுகைக்கு சக்தியில்லாத

வனாய், சக்தியுண்டானாலும் ஸ்வரக்ஷணே ப்ராப்தியற்றவனாய், இப்படியிருக்கையாலே ஸர்வதர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப் பற்றுகையாகிற அத்யவஸாயத்தோடு கூடியிருக்கிறவுன்னை என்றபடி.

[மத்ப்ராப்திப்ரதிபந்தகைர் விரஹிதம் குர்யாம்] * ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * இஷ்டவிரோதியாயும் அநிஷ்டஹேதுவாயுமிருக்குமது பாபம். மோக்ஷப்ரகரணமாகையாலே எம்பெருமானை யடைவதற்கு விரோதிகள் எவையோ அவையே இஷ்டவிரோதிகள். ஆகவே, நீ என்னை யடைவதற்கு விரோதிகளென்று எந்தெந்த பாபங்களில் நின்றும் அஞ்சுகிறாயோ அந்தந்த பாபங்களெல்லாவற்றில் நின்றும் உன்னை விடுவிக்கிறேனென்கை.

[சுசம் மாக்ருதா:] ஸ்வரூப விருத்தங்களும் அபாய பஹுளங்களுமான உபாயாந்தரங்களை விடச்சொன்னதனாலும், ஸ்வரூபாநுரூபமும் நிரபாயமுமான ஸித்த ஸாதனத்தை ஸ்வீகரிக்கச் சொன்னதனாலும் இனி சோகநிமித்தமில்லாமையாலே சோகப்படாதே கொள் என்று ஈரக்கையாலே கண்களைத் தடவிக் கொடுத்தபடி.

ப்ரதிபந்தக நிவ்ருத்திபூர்வகமான பகவத்ப்ராப்தியே பலனாயிருக்க, இங்கு பகவத் ப்ராப்தியைச் சொல்லாதே ப்ரதிபந்தக நிவர்த்தனத்தை மாத்திரம் மூலத்தில் சொன்னது என்னென்னில்; ஸகல ப்ரதிபந்தங்களும் தொலைந்தவாறே ஸ்வரூபாநுபந்தியான பகவத் ப்ராப்தியானது தன்னடையே ஸித்திக்குமதாகையாலே தனிப்படச் சொல்லவேண்டாவென்று பகவதபிப்ராயம். ... ... 7

निश्चित्य त्वदधीनतां मयि सदा कर्माद्युपायान् हरे
कर्तुं त्यक्तुमपि प्रपत्तुमनलं सीदामि दुःखाकुलः ।
एतज्ज्ञानमुपेयुषो मम पुनस्सर्वापराधक्षयं
कर्तासीति दृढोऽस्मि ते तु चरमं वाक्यं स्मरन् सारथेः ॥ ८ ॥

நிச்சித்ய த்வததீநதாம் மயி ஸதா கர்மாத்யுபாயாந் ஹரே!
கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்துமநலம் ஸீதாமி து:க்காகுல:,
ஏதந் ஜ்ஞானமுபேயுஷோ மம புநஸ் ஸர்வாபராதக்ஷயம்
கர்த்தாஸீதி த்ருடோஸ்மி தே து சரமம் வாக்யம் ஸ்மரந் ஸாரதே:. (8)

| | |
|---|---|
| ஹே ஹரே! | எம்பெருமானே! |
| மயி ஸதா த்வத் அதீநதாம் நிச்சித்ய | அடியேன் எப்போதும் தேவரீருக்கே அதீனமான ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளை யுடையவனென்பதை நிச்சயித்து |
| கர்மாதி உபாயாந் | கருமயோகம் முதலிய உபாயங்களை |
| கர்த்தும் | செய்வதற்கும் |
| த்யக்தும் அபி | விடுவதற்கும் |
| ப்ரபத்தும் | ப்ரபத்தி பண்ணுவதற்கும் |
| அநலம் | அஸமர்த்தனாய் |
| து:க்காகுல: ஸீதாமி | மிகவும் துக்கப்படா நின்றேன்; |
| ஸாரதே: தே | பார்த்தஸாரதியாய் நின்ற தேவரீருடைய |
| சரமம் வாக்யம் | கடைசியான வாக்யத்தை |
| ஸ்மரந் | ஸ்மரித்தவனாய்க்கொண்டு |
| ஏதத் ஜ்ஞாநம் உபேயுஷ: மம | பகவானே உபாயமென்று துணிந்திருக்கையாகிற இந்த அத்யவஸாயத்தைப் பெற்றிருக்கு மடியேனுக்கு |
| ஸர்வ அபராத க்ஷயம் கர்த்தாஸி இதி | ஸகல பாப நிவ்ருத்தியையும் தேவரீரே பண்ணித்தரவல்லீரென்று கொண்டு |
| த்ருட: அஸ்மி | துக்கமற்று நிர்ப்பரனாயிருக்கின்றேன். |

கீழ் ச்லோகத்தில் சரமச்லோகார்த்தத்தை விவரித்துத் தலைக்கட்டிற்றே யாகிலும், (மா சுச:) என்கைக்குறுப்பான சோகநிமித்தத்தையும் அதனுடைய நிவ்ருத்தி ப்ரகாரத்தையும் காட்டா நின்றுகொண்டு, இந்த தேஹ ஸம்பந்தம் கழியு மளவும் தமக்கு நிர்ப்பரத்வாநுஸந்தானம் குறையற்றிருக்கிறபடியை உபபாதித்துக் கொண்டு இந்த ச்லோகத்தோடே இப்ப்ரபந்தத்தை நிகமித்தருளுகிறாராயிற்று.

இதில் பூர்வார்த்தத்தாலே சோகநிமித்தத்தை உபபாதிக்கிறார். [ஹே ஹரே! மயி த்வதநீநதாம் ஸதா நிரீக்ஷ்ய] என்னுடைய அத்யந்த பாரதந்த்ர்யமாகிற நிஷ்க் ருஷ்டஸ்வரூபத்தை யநுஸந்தித்து என்றபடி. சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள கர்மயோகாதிகளான உபாயாந்தரங்களை விடுகைக்கு ஹேது—அவற்றையறிகைக் கும் அநுஷ்டிக்கைக்குமீடான ஜ்ஞான சக்திகளில்லாமை மாத்திரமேயன்று; எம் பெருமானுக்கு அத்யந்தம் பரதந்த்ரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேரா தென்னுமதுவே முக்யஹேதுவென்று ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தமாகையாலே அது இங்கு முந்துறமுன்னம் காட்டப்படுகிறது. ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரயத்ந நாற்றத்தையும் ஸஹியாத ஸ்வரூபத்தை உள்ளபடி அறியப் பெறாதவர்களுக்கே கர்மயோகாதிகள் உபாயமாயிருக்கும். ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞானமுடையவர் களுக்கு அவை அபாயமாயேயிருக்கும். அத்யந்த பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத் துக்கு ஸ்வப்ரயத்நரூபமான அவை நாசகமாகுமன்றோ.

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *நெறிகாட்டி நீக்குதியோ நின்பால்* என்றருளிச் செய்த பாசுரம் இங்கு ப்ரமாணமாக அநுஸந்தேயம். இப்பாசுரத்தின் பொருள் கேளீர். நெறி யென்றால் வழி; வழியாவது உபாயம். சரமச்லோகத் துக்குக் கீழே விரிவாகச் சொல்லப்பட்டுள்ள ஸாதநாந்தரங்களை இங்கு நெறியென் கிறது. எம்பெருமான் யாரை யநுக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவர்களை நோக்கி 'நீங்கள் எவ்விதமான அலைச்சலும் படவேண்டா; என்னையே தஞ்சமாக வுறுதிகொண்டு மார்விலே கைவைத்து உறங்குங்கள்' என்பன். எவர்களைக் கைவிட நினைக்கிறானோ அவர்களுக்கு அருந்தொழில்களை அளவில்லாதபடி விதித்து 'இவற்றைச் செவ்வனே செய்து பேறுபெறுங்கள்' என்பன்: ஆகவே நெறி காட்டுகை யென்பதும் நீக்குகையென்பதும் பர்யாயம். நெறியைக் காட்டுகையாவது—'இது கர்மயோகம், இது பக்தியோகம், இவற்றுள் எது உமக்கு ஸாத்யமோ அதனை யநுஷ்டிக்கக் கடவீர்' என்று சொல்லித் தான் உதாஸீநனாகை. [நெறிகாட்டி நீன்பால் நீக்குதியோ?] உன்னையொழிய வேறொருபாயத்தைக் காட்டி உன் பக்கலில் நின்றும் என்னை அகற்றப் பார்க்கிறாயோவென்று ஆழ்வார் எம்பெருமானை நோக்கிக் கேட் கிறபடி. ஆக இப்பாசுரத்தால், உபாயாந்தரங்களில் அந்வயிக்கை எம்பெருமான் பக்கலில் நின்றும் அகல்வதற்குறுப்பு என்று தேறி நின்றது.

[கர்மாத்யுபாயாந் கர்த்தும் அநலம்] கீழே விவரித்தபடி ஸ்வரூப விருத்தமாகை யாலும் துஷ்கரமாகையாலும் து:க்கபஹுளமாகையாலும் நேரே பல ஸாதனமல்லா மையாலும் ஸாபேக்ஷமாகையாலும் விளம்பித்துப் பலன்தரக் கூடியவையாகை யாலும் நெடுநாள் ஸாதிக்கவேண்டுகையாலும் பலவாகையாலும் இவற்றை யனுஷ் டிக்க அஸமர்த்தனாய்.

[த்யக்துமபி அநலம்] வர்ணாச்ரமோசிதங்களாய் அபிமத பலஸாதனங்களா யிருக்கையாலே சாஸ்த்ரவிஹிதங்களானவிவற்றை விடவும் மாட்டாதவனாய். விட மாட்டாமைக்கு ஹேது ப்ரத்யவாயபீதி.

[ப்ரபத்துமபி அநலம்] ஸ்வரூபாநுரூபத்வம், ஸுகரூபத்வம், நிரபாயத்வம், ஸித்தத்வம், ஸ்வத: பலஸாதநத்வம், நிரபேக்ஷத்வம், அவிளம்பித பலப்ரதத்வம், ஏகத்வம் முதலானவற்றாலே ஸுகரமாயிரா நின்ற உபாயமானது சோகநிவ்ருத்திக் காகச் சொல்லப்பட்டிருந்தாலும் அதற்கு அங்கமாக விதிக்கப்பட்ட ஸர்வதர்ம த்யாகம் செய்யப்போகாமையாலும் ஆர்த்தியில்லாமையாலும் ஆகிஞ்சந்யமில்லாமை யாலும் மஹாவிச்வாஸமில்லாமையாலும் ஸர்வதர்மத்யாகத்தை அங்கமாகவுடைய ப்ரபத்தியையும் செய்ய அஸமர்த்தனாயிருக்கின்ற நான். [து:க்காகுல: ஸீதாமி] சோகாவிஷ்டனாய்க்கொண்டு தளரா நின்றேன்.

ஆக இவ்வளவாலே சோக நிமித்தத்தைச் சொல்லி, மேலே சோகநிவ்ருத்தி ஹேது சொல்லுகிறது.

[ஸாரதே: தே சரமம் வாக்யம் ஸ்மரந் ஸந், ஏதத் ஜ்ஞாநம் உபேயுஷோ மம ஸர்வாப ராதக்ஷயம் கர்த்தாஸீதி த்ருடோஸ்மி] வாத்ஸல்யாதிசயத்தினால் பார்த்தன் தன் தேர் முன் நின்ற பரமாப்தனை உன்னுடைய * ஸர்வதர்மாநித்யாதி சரமச்லோகார்த் தத்தை அநுஸந்தியா நின்றவனாய்க் கொண்டு, இதில் பூர்வார்த்தத்தில் சொன்ன பகவதேக உபாயத்வாத்யவஸாயத்தை உன்னுடைய ப்ரஸாதத்தாலே அடைந் துள்ள அஜ்ஞனும் அசக்தனுமான எனக்கு அவித்யாகர்ம வாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களாகிற ஸகல பாபங்களினுடையவும் விநாசத்தைப் பண்ணியருள வல்லையென்று தேறியிரா நின்றேனென்கை. த்ருடோஸ்மி என்றது அவஸாதம் நீங்கி நிர்ப்பரனாயிரா நின்றேனென்றபடி.

இதில் பூர்வார்த்தத்தில் ஸீதாமி என்றும், உத்தரார்த்தத்தில் த்ருடோஸ்மி யென்றும் சொன்னவிவற்றால் = தன்னை நோக்குமளவில் அவஸாதமும் எம்பெருமா னுடைய திருக்குணங்களை நோக்குமளவில் தந்நிவ்ருத்திபூர்வகமான நிர்ப்பரத்வாநு ஸந்தானமும் இவ்வதிகாரிக்கு யாவஜ்ஜீவம் அநுவர்த்திக்குமென்று காட்டப்பட்ட தாயிற்று. ... ... ... ... ... (8)

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்யர் இயற்றிய

**அஷ்டச்லோகீ வியாக்கியானம்**

முற்றுப்பெற்றது.